# இந்திப் போர்



[ ஈ. வெ. கி. சம்பத், எம். பி. ]



"முல்லைப் பதிப்பகம்"

முசிரி, :: திருச்சி மாவட்டம்.

இந்தி எதிர்ப்புப் போர் துவங்கி உள்ள இத்தருணத்தில், 13—10—57லும் 8—6—60லும் நான் நிகழ்த்திய எனது சொற்பொழிவுகளைத் தொகுத்து வெளியிட முன்வந்த 'முல்லைப் பதிப்பகத்தாரின்' முயற்சியைப் பாராட்டுகிறேன்—வரவேற்கிறேன்.

அன்பன்,

ஈ. வெ. கி. சம்பத், எம்.பி.

# பதிப்புரை

நாம் இன்றைக்கு ஏதோ புதிதாக இந்தியை எதிர்ப்பவர்களா என்றால், இல்லை 1937-லிருந்தே இந்தியை எவர் கட்டாயமாகக் கொண்டுவந்தாலும், எதையும் இழக்கத் தயாராகி, எவரையும் இழந்து விடத் தக்க வகையில் போராடிப் போராடி விரட்டியடித்திருக்கிறோம். அந்தப் போராட்டத்துக்கு நம்மையெல்லாம் வழிநடத்திச் செல்லுகின்ற முறையில் நம்முடைய தளபதிகளில் பலரும் அவரவருக்கே உரிய முறையில் போர்க்குரல் கொடுத்தனர்—கொடுத்துக்கொண்டும் இருக்கின்றனர். அந்த வகையில் அண்ணன் சம்பத் அவர்கள், அவருக்கே உரிய பாணியில் கட்டிடம் கட்டுகின்ற முறையில், அடுக்கடுக்காகவும், தொடராகவும், இந்தி எதிர்ப்புணர்ச்சியின் காரணத்தையும், எதிர்க்க வேண்டியதின் அவசியத்தையும் சொல்லி, போர்முரசு கொட்டினார்கள். 1957-ல் நாடெங்கும் இந்தி எதிர்ப்புக் கூட்டங்கள் நடத்தியபொழுது அண்ணன் சம்பத் அவர்கள், சென்னைக் கடற்கரையில் இலட்சக் கணக்கான மக்களுக்கு முன்னால் நம்முடைய இதயக் குரலை—இலட்சியக் கனவை எடுத்துச் சொன்னார்கள். அந்தக் கனவுக்கு நாங்கள் தந்த பெயர்தான் **"இந்திப் போர்."** அடுத்து அண்மையில் சென்னை பெத்துநாயக்கன் பேட்டையில் இந்தி வெறியர்களின் அட்டகாசத்தைந் நடுக்கின்ற வகையில் போர் முரசு கொட்டினார்கள். அந்த முரசொலிக்கு நாங்கள் தந்த தலைப்புத்தான் **"முழக்கம்."** இந்த இரண்டினையும் திராவிடத்துக்கு தரவேண்டும் என்று விரும்பி அண்ணன் சம்பத் அவர்களைக் கேட்டோம். அனுமதியும் தந்து, வாழ்த்தினார் முன்னுரை தந்ததின் மூலமாக. அண்ணனுக்கு எங்கள் இருதயப் பூர்வமான நன்றியைத் தெரிவிக்கிறோம்.

விடுதலை வேட்கை கொண்ட திராவிடத்துக்கு இந்த நூல் நல்லதோர் போர்க்கருவியாக அமையவேண்டும் என்று கருதியே வெளியிட்டிருக்கிறோம். அத்தகைய போர்க்கருவி ஒன்றை அவசரமான நேரத்தில், அழகு கெடாமலும், தரம் குறையாமலும், அமைத்துக் கொடுத்த **சிவாஜி** அச்சகத்தாருக்கும் எங்கள் நன்றி, இவற்றிற்கெல்லாம் மேலாக இந்த நூலின் மூலமாக திராவிடம் புதியதொரு எழுச்சி பெறுமானால் அதுவே எங்களின் வெற்றி—இலட்சியமும்கூட.

இங்ஙனம்,

முசிரி,
**திருச்சி மாவட்டம்.**

**முல்லைப் பதிப்பகத்தார்.**

# இந்திப் போர்

இன்றையத் தினம் தி. மு. கழகம், இந்த நாட்டிலிருக்கின்ற பழுத்த அரசியல் தலைவர்களுக்கும், மற்றக் கட்சிகளுக்கும் இந்தித் திணிப்பின் பேராபத்தை எடுத்துக் கூறிக்கொண்டிருக்கிறது; இந்தப் பிரச்சினையின் பின்னாலே பொதிந்திருக்கின்ற பேராபத்தின் தன்மையைத் தமிழ் நாட்டிலே இருக்கின்ற எல்லா மக்களும் உணர்ந்து தீரவேண்டும். இது ஒன்றும் பண்டிதர்களுடைய மேசையின் மீது வைக்கப்படவேண்டிய காகிதக் கத்தைகள் அல்ல; இந்த நாட்டு மக்களுடைய உள்ளத்துக்கு அறிவிக்க வேண்டிய மிக முக்கியமான விஷயம். இந்த நாட்டு மக்களுக்குத் தெரியாமல் ஒரு 10-பேர் ஒரு அறையிலே கூடி முடிவு செய்கின்ற சாதாரண விஷயமல்ல; இந்த நாட்டிலே இருக்கின்ற ஒவ்வொருவரும் இதிலே தங்களுடைய உணர்வை — தங்களுடைய எண்ணத்தை — தங்களுடைய உள்ளத்தை — தங்களுடைய உரிமையை எடுத்துக் கூறக்கூடிய அவ்வளவு பெரிய முக்கியமான பிரச்சினை—இந்த இந்திப் பிரச்சினையாகும்.

இன்றையத்தினம், "இந்தியைக் கொண்டுவருகிறோம்" என்று சொல்லுபவர்கள், ஒவ்வொரு இடத்திலேயும் எப்படி எப்படி பேசுகிறார்கள் என்பதைக் கேட்டுக்கொண்டுதானிருக்கிறோம். வேண்டுமானால் அவர்கள் அதிகாரத்திலே இருக்கின்ற காரணத்தாலும், "சுதந்திரம் வந்ததும் வெள்ளையன் வெளியேறினான்" — என்ற இப்படிப்பட்டக் கோலாகல சந்தோஷ ஆரவாரத்துக்கு மத்தியிலேயும் அவர்கள் அமைத்துக்கொண்ட அரசியல் நிர்ணய சபையிலே நிறைவேற்றிவிட்ட ஒரு

சட்டத்தை வைத்துக்கொண்டு, "அரசியல் சட்டம் அப்படிக் கூறுகிறது; நாங்கள் என்ன செய்வது ?— என்று இன்றையத் தினம் நடிப்பதிலே அவர்கள் வல்லவர்களாக இருக்கலாம்; ஆனால் நமக்கு நன்றாகத் தெரிகிறது — "அரசியல் சட்டம் உடைக்கப்பட வேண்டிய சட்டம் என்பது மட்டும் அல்ல; அரசியல் சட்டத்திலே இருக்கின்ற அத்தனை விதி முறைகளுக்கும் இந்த நாட்டு மக்களுடைய ஒப்பம் கிடையாது; இந்த நாட்டு மக்களினுடைய உரிமை வாடை அதிலே கிடையாது; யாரோ சில பேர், கிடைத்த சந்தர்ப்பத்திலே உருவாக்கிக்கொண்ட சட்டம்"— அது என்று! ஆகவே, அந்த விதிமுறைகளுக்கு நாம் எத்தகைய மதிப்பளிக்க வேண்டுமென்பதையும் நாம் உணருவோம்.

"இந்த நாட்டினுடைய ராஷ்டிரபதியாயிருக்கின்ற பெரியவர், சமீபத்திலே தென்னாட்டிலே வலம்வந்தார்; கேரளத்திற்குச் சென்றார்; சென்னையிலே சில நிமிடங்கள் கழித்தார்; ஒவ்வொரு ஊரிலும் அவருக்குக் கிடைத்த நேரம் சின்ன வாய்ப்பாக இருந்தாலும் — பெரிய வாய்ப்பாயிருந்தாலும் எதைச் சொல்லி வந்தார் என்பதை நம்மால் மறந்துவிட முடியவில்லை. ஒவ்வொரு ஊரிலும் அவர் போய்ச் சொல்லுகிறார் — இந்தியாவினுடைய ஒற்றுமை நிலைநாட்டப்படவேண்டும்; இந்தியாவினுடைய ஒற்றுமைக்கு ஆபத்து வர நாம் சகிக்க மாட்டோம் ஒற்றுமையை உறுதிப்படுத்திக் கொள்வதற்கும், பலப்படுத்திக் கொள்வதற்குமிருக்கின்ற ஒரே வழி இந்தியை இந்த நாட்டு மக்கள் ஏற்றுக்கொள்ள வேண்டியதுதான் !—என்று !

"இன்னும் ஒரு படி மேலே போய்ச் சொல்லுகிறார்— "இந்தியாவினுடைய தேசீய மொழி இந்திதான்" — என்று ஒவ்வொரு ஊரிலும் சொல்லிவிட்டுப் போயிருக்கிறார்.

"ஆனால் பண்டித நேரு அவர்கள், ஓரிரு ஆண்டுகளுக்கு முன்னால் தென்னாட்டில் வலம்வந்தார்; அந்த நேரத்திலே இந்த

நாட்டு மக்கள் மத்தியிலே அவர் என்ன கூறினர்? — " இந்தி மட்டுந்தான் இந்தியாவினுடைய தேசியமொழி என்று சொல்வதனலே பலருடைய உள்ளங்களைப் புண்படுத்துவதாக அறிகிறேன்; நான் இப்பொழுது சொல்லுகிறேன் – 8-வது ஷெட்யூலிலே இருக்கின்ற 14- மொழிகளுமே இந்தியாவினுடைய தேசிய மொழிகள்தான்; அதுமட்டுமல்ல; இந்தியாவிலேயே பேசப்படுகின்ற அத்தனை மொழிகளும் இந்தியாவினுடைய தேசிய மொழிகள்தான்; போதுமா?— என்று சொல்லிவிட்டுப் போனர்.

" அவர் சொன்னதற்குப் பிறகு, இந்நாட்டு ராஷ்டிரபதி இப்படிச் சொல்லுகிருர் — "இந்தியாவின் தேசிய மொழி இந்தி மட்டும்தான்"—என்று !

" சட்டத்திலே அவர்கள் எழுதியிருப்பது, " அரசாங்க மொழி" என்பது; ஆனல், சட்டத்தை இந்த நாட்டில் அமுல் நடத்த வேண்டிய பெரும் பொறுப்பிலே இருக்கின்ற அந்தப் பெரியவர், ஊர் பூராவும் சுற்றிச் சுற்றிச் சொல்கிருர்—'இந்தி இந்த நாட்டினுடைய தேசிய மொழி'—என்று !

**இந்த இரண்டு கருத்துக்களுக்குமிடையிலே இருக்கின்ற வேறுபாடுதான், விடுதலைக்கும் - விடுதலையைப் பறிக்க முயலுகின்ற வெறியர்களினுடைய நிலைக்கும் இருக்கின்ற வேறுபாடாகும்.**

" இன்றையத்தினம் உலகத்திலே நாம் காண்கிருேம் — எத்தனையோ நாடுகளிலே பல மொழிகள் பேசுகின்ற மக்கள் வாழ்ந்துகொண்டுதானிருக்கிருர்கள்; கனடாவிலிருக்கின்ற மக்கள் ஆங்கிலத்தையும் பேசுகிருர்கள்; பிரெஞ்சு மொழியும் பேசுகிருர்கள்; இரண்டு மொழிகளும் அங்கே, கனடாவினுடைய தேசியமொழிகள் என்ற உரிமையைப் பெற்றிருக்கின்றன —இரண்டு மொழிகளும், கனடாவினுடைய அரசாங்க மொழிகள் என்ற அந்தஸ்தைப் பெற்றிருக்கின்றன.

"அதேபோல், ஐரோப்பாவிலிருக்கின்ற சுவிட்சர்லாந்து நாட்டிலே நாம் காணுகிறோம்; 4-மொழிகளை அந்த நாட்டு மக்கள் பேசுகிறார்கள்—ஜெர்மன் மொழியைப் பேசுகிறார்கள்; இத்தாலி மொழியைப் பேசுகிறார்கள்; ரொமான்ஸ் என்ற மொழியைப் பேசுகிறார்கள்; பிரெஞ்சு மொழியைப் பேசுகிறார்கள்—4 மொழிகளும் சுவிட்சர்லாந்துநாட்டின் தேசீயமொழிகள் என்ற அந்தஸ்தைப் பெற்றிருக்கின்றன; இதிலே அந்த ரொமான்ஸ் என்ற மொழிமட்டும் 1,000-க்கு 9-பேர் மட்டுமே பேசுவதனால், அந்த மொழியைத் தவிர, பாக்கி 3-மொழிகளும் சுவிட்சர்லாந்தினுடைய அரசாங்க மொழிகள் என்ற அந்தஸ்தைப் பெற்றிருக்கின்றன." அங்கு போடப்படுகின்ற சட்டங்கள், கோர்ட்டு நடவடிக்கைகள், கோர்ட்டுகளிலே வழங்கப்படுகின்ற தீர்ப்புகள் அனைத்தும் அந்த 3-அரசாங்க மொழிகளிலேயும் ஒரே சமயத்தில் வந்துதீர வேண்டும். சுவிட்சர்லாந்து நாட்டு மக்கள் சபையில் பேசுகின்ற உறுப்பினர்கள் 4 மொழிகளில் எந்த மொழியில் வேண்டுமானாலும் பேசலாம்; பேசப்படுகின்ற எந்தப் பேச்சையும், எந்த ஒரு மொழியிலேயும் திருப்பிக் கேட்கலாம், மொழி பெயர்ப்பாளரிடத்திலே! அந்த உரிமைகள் அந்த நாட்டிலே வழங்கியிருக்கிறார்கள் என்றால் என்ன பொருள்?

"இன்றையத்தினம் இவ்வளவு பெரிய நாடு, இமாலயத்தின் அடிவாரத்திலிருந்து கன்னியாகுமரி நுனிவரையிலே 36-கோடி மக்களும் அண்ணன்—தம்பிகள் என்று பேசிக்கொண்டிருக்கின்ற இந்த அசகாய சூரர்கள், 'எங்களுடைய மொழி மட்டும்தான் தேசீய மொழி' என்று சொல்லுகிறார்கள் என்றால், அவர்களுடைய மண்டைக் கனத்தை எத்தனை நாளைக்கு நாம் அனுபவிப்பது என்ற கேள்வி இன்று இரவு, தமிழ்நாடுமுழுவதும் ஒலித்துக்கொண்டிருக்கிறது.

"இதற்கு ஒரு முடிவுகட்டித் தீரவேண்டுமென்று விடுதலை வீரர்கள் எண்ணுவதிலே எந்தவித தவறும் இருக்க முடியாது.

" ஏன் அந்த நாட்டவர்களெல்லாம் — என்ன பைத்தியக் காரர்களா? அவர்களெல்லாம் என்ன—நம்மை விட அரசியல் ஜனநாயகம் அறியாதவர்களா? அவர்கள் என்ன நம்மை விட உரிமைப்போராட்டத்திலே மட்டமானவர்களா? ஏன், அத்தனை மொழிகளுக்கும் சமத்துவ அந்தஸ்து கொடுத்திருக்கிறார்கள்!

" இன்றைக்கு டெல்லியிலே உள்ள மக்கள் சபையில், தமிழ் நாட்டிலிருந்து சென்றிருக்கின்ற பிரதிநிதியொருவர், தமிழிலே பேசிவிட முடியுமா ? " பேசலாம் " என்று ஒரு இடம் வைத்திருக்கிறார்கள்; பேசுவதென்றால், பேசுவதற்கு ஒரு வாரத்திற்கு முன் சபாநாயகரைச் சந்தித்து, "ஐயா, நான் தமிழிலே பேச வேண்டும் " என்று கேட்கவேண்டும்; பேசுவ தென்றால்—நீ தமிழிலே பேசப்போவதை, ஆங்கிலத்திலேயாவது இந்தியிலாவது முன்னாலே எழுதிக்கொடு' என்று சபாநாயகர் கேட்பார்.

மற்றவர்களுக்கு உள்ள உரிமை, அவர்கள் எந்த நேரத்தில் வேண்டுமானாலும் தங்களுக்குத் தோன்றிய கருத்தை எடுத்து இந்தியிலும், ஆங்கிலத்திலும் பேசலாம்; ஆனால் ஏனைய மொழிக்காரர்கள், ஒரு வாரத்திற்கு முன்பே சபாநாயகரின் முன்னிலையிலே மண்டியிட்டு, ஆங்கிலத்தில் ஒரு பிரதிநிதியைத் தர வேண்டும்— 'ஏழுநாள் கழித்து நான் தமிழிலே இதைப் பேசப்போகிறேன் என் பதைத் தரவேண்டும் இதற்குப் பெயர் சனநாயகமா? இதற்குப் பெயர் குடியரசுக் கோட்டமா?— என்று கேட்டால், அதிலே என்ன தவறு இருக்கிறது?

"இன்றைக்கே இந்த நிலைமை! இவர்கள் இன்னும் இந்தியை முழுவதும் இந்த நாட்டினுடைய மொழியாக மாற்றிவிட்டால், பிறகு அந்த - முதல் வாரம் விண்ணப்ப அறிக்கை கொடுக்கின்ற—பேச்சின் பிரதியைக் கொடுக்கின்ற— அந்த நிலை கூட பறிபோய்விடும்.

"இன்றையந்தினம் இதை அவர்கள் தெரியாமல் செய்து விடவில்லை; ஏதோ ஒரு சிறு தவறுதல் காரணமாக இப்படிப்பட்ட காரி

யத்தில் அவர்கள் ஈடுபட்டுவிட வில்லை: திட்டமிட்டு, சூழ்ச்சி எண்ணத்தோடு அவர்கள் இந்தக்காரியத்தைச் செய்து கொண் டிருக்கிறார்கள்.

"இன்றையத்தினம் அவர்களுடைய தலைவர்கள் என்ன பேசு கிறார்கள்? ஜவகர்லால் நேரு பேசுகிறார் — 'ஆங்கிலத்தை நாங்கள் கைவிட்டுவிட மாட்டோம்; இந்தியைக் கொண்டு வருவதாலேயே, இந்தியர்கள் ஆங்கிலத்தைக் கைவிட்டு விட முடியாது?— என்று!

"கே. எம் முன்ஷி அவர்கள் பேசுகிறார் — 'ஆங்கிலத்தை நாம் வெறுப்பது தப்பு; 'ஆங்கிலம் அன்னியனுடைய மொழி எனவே, அதை இந்த நாட்டில் உலவவிடுவது நம்முடைய சுயமரியாதைக்கு இழுக்கு' என்று பேசுகின்றவர்கள், குறுகிய மனோபாவம் படைத்த வர்கள்; 150 ஆண்டு காலம் ஆங்கிலம் இந்த நாட்டிலே இருந்திருக்கி றது; நமக்கும் அதிலே அனுபவபாத்திய மிருக்கிறது'— என்று அந்தப்பெரியவர் கூறுகிறார்.

"இப்படி, காங்கிரசிலே இருக்கின்ற பல்வேறு தலைவர்கள், ஆங்கிலத்தையும் கைவிட மாட்டோம்' என்று சொல்லிக்கொண்டி ருக்கிறார்கள்

"இந்த இடம்தான் நமக்குப் புரியவில்லை. ஆங்கிலத்தையும் கைவிடப் போவதில்லை? ஆனாலும் இந்த நாட்டிலிருக்கின்ற அத்தனை பேரும், எங்களுடைய மொழியை கற்றுக்கொள்ள வேண்டுமென்று, அவர்கள் கர்ஜிப்பதன் நோக்கம்தான் நமக்குப் புரியவில்லை.

"ஆங்கிலம் இருக்குமென்றால், இன்றைக்கு என்னென்ன காரியங்களுக்குப் பயன் பட்டுக்கொண்டிருக்கின்றதோ, அந்தக் காரியங்களுக்கு அதை ஏதாவது ஒரு அளவிலே— ஒரு உருவத்திலே பயன்பட்டுக் கொண்டுதானிருக்கும். ஆனாலும் இந்தி வேண்டு மென்கிறார்களே, அதன் நோக்கமென்ன?

"இந்திய மொழிகளுக்கு அந்தஸ்தைத் தருகிறோம் என்றால் தாராளமாகத் தரட்டும். அந்தந்த மாநில சர்க்கார்கள் அந்தந்த மாநி லத்திலிருக்கின்ற மொழிகளிலே, தங்களுடைய அரசை நடத்திச் செல்லட்டும். மாநிலங்களுக்கும்— மத்திய சர்க்காருக்கும், ஒரு

மாநிலத்துக்கும் — இன்னொரு மாநிலத்துக்கும் இடையிலே செய்திப் போக்குவரத்துக்கு இந்தியைத்தான் பயன்படுத்தவேண்டும். என்று சொன்னால், அதற்குப் பின்னாலே ஒளிந்துகொண்டிருக்கின்ற அந்த உருவத்தைத்தான், தமிழ் மக்கள் இன்றைக்குக் காணவேண்டுமென்று முன்னேற்றக்கழகம் அறை கூவிக்கொண்டிருக்கிறது.

"எப்படி அந்த நாளிலே, வெள்ளைக்காரன் தன்னிடத்திலே வேலை செய்கின்றவர்கள் — பட்லராயிருந்தாலும், அவன் அரைகுறை ஆங்கிலம் தெரிந்தவனாயிருந்தாலும் — அவன் ஆங்கிலத்திலேதான் தன்னிடத்திலே பேசவேண்டுமென்று எண்ணினானோ, அதைப்போல், இன்றைக்கிருக்கின்ற இவர்கள், ஆட்சிபீடத்திற்கு வந்து விட்டோம் — ஆட்சிப்பீடம் இன்றைக்கு நம்முடைய கரங்களிலே களிநடம் புரிந்து கொண்டிருக்கிறது' என்ற எண்ணம் பிறந்தவுடனே, இன்றைக்கு இவர்களுடைய மொழியை இந்த நாட்டிலிருக்கின்ற அடிமைகள் பயில வேண்டுமென்ற கருத்திலே நம்மீது திணித்துக்கொண்டிருக்கிறார்கள். இது எல்லோருக்கும் இன்றையத் தினம் தெரிந்து தீர வேண்டும்.

"இது ஒன்றும் வெறும் ஆபிஸ் பிரச்சினையல்ல; வெறும் சர்க்கார் அலுவலாளர்களுடைய பிரச்சினை மட்டுமல்ல; பண்டிதர்கள், படித்தவர்கள், பெரிய புலவர்கள் ஆராய்ச்சிக்கு மட்டும் உரிய பிரச்சினையல்ல; இதற்குப் பின்னாலே ஒளிந்துகொண்டிருக்கிற அரசியல் சூழ்ச்சியை நாம் உணர்ந்து தீரவேண்டும்.

இன்றையத்தினம் மக்கள் சபை எப்படி உருவாகியிருக்கின்றது? நமக்கு மிக நன்றாகத் தெரியும்.

"இன்றையத்தினம் மக்கள் சபையிலே வீற்றிருக்கின்ற உறுப்பினர்கள் ஏறத்தாழ 507 பேர் இருக்கிறார்கள்; இந்த 507 பேரில் இடையிலே ஒரு பெரும் கனமாக உத்தரப் பிரதேசம், பீகார் மத்திய பிரதேசக் காரர்களும், மற்றும் அவர்களுக்கு இணக்கமாக உள்ள இராசஸ்தான் காரர்களும், குசராத்தியர்களும் உட்கார்ந்து கொண்டிருக்கிறார்கள்.

"இந்த நான்கு மாநிலத்தவர்களும் சேர்ந்து, இந்த 507 பேரிலே கிட்டத்தட்ட 240 பேர் ஆகிவிடுகிறார்கள்; ஏன் இந்த நான்கு

மாநிலத்தவரை மட்டும் குறிப்பிடுகிறேன் என்ருல், இவர்கள் இந்தி மொழியை ஏற்றுக்கொள்கிறவர்கள்; இந்தி மொழி நாட்டிலே வளர வேண்டுமென்பதிலே பெருமை கொள்பவர்கள்; இந்திக் கலாச்சாரத் திலே திளைத்துக்கொண்டிருப்பவர்கள்.

"ஒரே இனம் என்ற எண்ணமும், ஒரே பகுதியிலே வாழுகின்ற வாய்ப்பும் பெற்றவர்கள் அந்த மன்றத்திலே ஆட்டிப்படைத்துக் கொண்டிருக்கிருர்கள் மற்றவர்களெல்லாம் யார்? ஒருவருக்கொரு வர் துணைபெற்ற நிலையிலே, துண்டு துண்டாக, சின்னஞ்சிறு சகதி களாகச் சிதறிக்கிடக்கின்றவர்கள்தான், பாக்கியிருக்கின்ற 267 பேரும்! இந்த நிலைமையை நாம் நன்ருக உணர வேண்டும்.

"இன்றையத்தினம் தமிழ் நாட்டிலிருந்து நாம் 41 பேர் போயி ருக்கின்ருேம்; உத்தரப் பிரதேசத்திலிருந்து 86 பேர் வந்திருக்கி ருர்கள்; கேரளத்திலே யிருந்து— பதினெட்டோ, இருபதோ போயி ருக்கிருர்கள்; பீகாரிலிருந்து ஏறத்தாழ 56 பேர் வந்திருக்கிருர்கள்

"அதேபோல், இராசஸ்தான், மத்தியப் பிரதேசப் பகுதிகள், இவர்களுக்கு எல்லா வகையிலும் அரசியலிலே பக்கமேளம் அடிக் கின்ற குசராத்திகள்— இவர்களை எடுத்துக்கொண்டால், மொத்தத் திலே அவர்கள் 240 பேர் ஆகிருர்கள் மற்றவர்களெல்லாம் அசாம் காரர்கள், வங்காளிகள், பஞ்சாபிகள், ஒரிசாகாரர்கள், ஆந்திரர்கள், கேரளீயர்கள், கர்ஞடகர்கள், தமிழர்கள் என்ருல், ஒருவருக் கொரு வர் தொடர்பற்ற சின்னஞ்சிறு சக்திகள். இவை அத்தனையையும் அவர்கள் நினைத்தபடி ஆட்டிப்படைத்துக் கொண்டிருக்கிருர்கள். இந்த அரசியல் சூழ்ச்சியை நாம் கவனித்துத் தீரவேண்டும்.

"இன்றைக்கு அவர்களுக்குப் பெருந்துணையாக விளங்குவது என்னவென்ருல், ரஷ்யாவிலே ஏதோ ஒரு இரும்புத்திரை இருந்த தாகவும், இருப்பதாகவும், இவர்கள் எழுதிக்கொண்டிருக்கிருர்களல் லவா? அது உண்மையோ பொய்யோ, நமக்குத் தெரியாது; ஆனல் இந்தியத் துணைக் கண்டத்தில், இந்த உத்தரப் பிரதேச— பீகார் வெறியர்களுக்கு பெருந்துணை புரிந்து கொண்டிருப்பது எதுவென் ருல், இந்த நாட்டிலிருக்கின்ற பத்திரிகைகள் ஆகும்,

"ஒரு மாநிலத்திலுள்ள மக்களுடைய உள்ளத்திலே என்ன குமுறல் இருக்கிறது? பக்கத்து மாநிலத்துக் காரருக்குக்கூட தெரியாது. அசாம் மலைக்காடுகளிலே நடைபெறுகின்ற காரியங்கள் தமிழ்நாட்டு மக்களுக்குத் தரப்படுவதில்லை. தமிழ் நாட்டில் இலட்சக் கணக்கான மக்கள் கூடி கண்ணீர் சொரிந்து, உள்ளம் கொதித்து அவ்வப்போது சொல்லுகின்ற செய்திகளை வடக்கே இருப்பவர்களுக்குத் தெரிவிப்பதில்லை. வடக்கே என்று நாம் நினைக்கத் தேவையில்லை; ஆந்திரத்திலிருக்கின்றவர்கள் கூட அறியமாட்டார்கள்—நாம் என்ன எண்ணுகிறோம்—எதைப்பற்றி எப்படி எண்ணுகிறோம் என்பது இவர்களுக்குக்கூடத் தெரியாது.

"இன்றையத்தினம் இந்தப் பத்திரிகைகளிலே வருகின்ற செய்திகளனைத்தும், சர்க்காருடைய சல்லடையிலே சலித்தெடுக்கப்பட்ட செய்திகளாயிருக்கின்றன; சர்க்காரின் கத்தரிக்கோல் பிரயோகத்திற்கு ஆளானதற்குப் பிறகு, உருக்குலைந்து அலங்கோலமாக வெளியிடப்படுகின்ற செய்திகளாயிருக்கின்றன; இந்தத் திரையை அவர்கள் சாதகமாக்கிக் கொண்டிருக்கிறார்கள்.

**"ஆனால், முன்பு குறிப்பிட்ட அந்த நான்கு மாநிலத்துக்காரர்களுக்கு மத்தியிலே அங்கே ஒரு பெரிய அரசியல் இன உணர்ச்சி உருவாகியிருக்கிறது. அந்த இன உணர்ச்சி இன ஆதிக்க வெறியாகவும் வளர்ந்திருக்கிறது; இதை நாம் உணர்ந்து தீர வேண்டும்.**

**"அந்த ஆதிக்கம் பரிபூரணத்துவம் அடைகின்றதா இல்லையா என்பது, இந்திப் பிரச்சினையிலே அவர்கள் பெறுகின்ற வெற்றி தோல்வியைப் பொறுத்திருக்கிறது.**

"இன்றைக்கு உதாரணத்துக்கு நான் சொல்ல விரும்புகிறேன்: திராவிட முன்னேற்றக் கழகம் டில்லி மக்கள் சபையிலே எடுத்துக் கூறிற்று— 'எந்தச் சக்தியைக் கொண்டும் நீங்கள் இந்தியைத் தென்னாட்டு மக்கள் மீது திணித்துவிட முடியாது; ஒரு கை பார்க்கிறோம்'— என்று!

"பலபேர் ஆச்சரியப்பட்டார்கள்; ஏன் ஆச்சரியப் பட்டார்கள்? இப்படிப்பட்ட பலமான சக்திகொண்ட ஒரு பெருங் கூட்டம் இந்தியாவிலிருக்கிறது என்ற தகவலே, இதுநாள் வரை அந்த அனுபவம மிகுந்த அரசியல் தலைவர்களுக்குத் தெரியாது; காரணமென்ன? இந்தப் பத்திரிகைகளின் மூலமாகத்தான் அவர்கள் தமிழர்களின் உள்ளங்களைத் தடவுகிறார்கள்; தென்னாட்டு மக்களைப் பற்றி அவர்கள் தெரிந்து கொள்கிறார்கள்.

"தோழர் கோவிந்தசாமி அவர்கள் இங்கு குறிப்பிட்டார்கள்—1937-லே இந்தி எதிர்ப்புப் போராட்டம் நடத்தினோம்; 1947-லே நடத்தினோம்; 1957-லே நடத்துகின்ற தருவாயிலே வந்து நிற்கின்றோம்'—என்று 20 வருடத்திய இந்தி எதிர்ப்பு வரலாற்றைச் சுருக்கமாகச் சொன்னார்கள்

"ஆனால் 20 ஆண்டுகளுக்குப் பின்பு நிலைமை என்ன? 'இந்தியே வேண்டாமென்று சொல்லுகிறீர்கள்?' என்று, அந்நாட்டவர்கள் இப்போதுதான் கேட்கிறார்கள்; நான் மக்கள் சபையிலே பேசி முடித்துவிட்ட பிறகு, என்னை தனியே சந்திக்கும் போதும் கேட்கிறார்கள்—எங்களுக்குப் புரிய வில்லையே, இந்தியே வேண்டா மென்கிறீர்களா? வேண்டவே வேண்டாமென்கிறீர்களா ? இடையிலே ஒரு இடம் கூட கிடையாதா?'—என்று அவர்கள் கேட்கிறார்கள், அவ்வளவு அதிசயப்படுகிறார்கள்

தாளமுத்து-நடராசன் செத்துப்போயிருக்கிறார்கள்; தாய்மார்கள் எத்தனையோபேர் சிறைக்குச் சென்றிருக்கிறார்கள்; இன்றைக்கு நாம தெருவெல்லாம் முழங்கிக்கொண்டிருக்கிறோம்; 20 ஆண்டுகளுக்குப் பிறகு கேட்கிறார்கள்— 'இந்தியே வேண்டாமென்று தமிழ் நாட்டில் சொல்லுகிறார்கள்?'— என்று!

**'அதனாலேதான் நான் குறிப்பிடுகிறேன்-ஒரு மாநிலத்திலேயிருக்கின்ற மக்களுடைய உள்ளத்திலே எழுகின்ற எண்ணங்களை-அவர்களுடைய உள்ளக் குமுறல்களை, இன்னொரு மாநிலத்திலே இருக்கின்ற மக்கள் அறவே அறிய ஒட்டாதவாறு இந்தச் சர்க்கார், பத்திரிகைத் திரையை வைத்துக்கொண்டு ஆட்சி நடத்திக் கொண்டிருக்கிறது.**

"டெல்லியிலிருக்கின்ற பிரச்சினையெல்லாம் - இந்தியைப் பற்றி முதலிலே இருந்த பிரச்சினை – எந்த இந்தி? காந்தியவர்கள் சொல்லிப் போனார்களே, 'கடைவீதி இந்துஸ்தானி' என்று, அதை வைத்துக் கொள்வதா; அல்லது தாண்டனைப் போன்ற உத்தரப் பிரதேச மொழி வெறியர்கள் கூறுகிறார்களே, 'சமஸ்கிருதம் கலந்த தேவநாகிரி இந்தி' என்று அதை வைத்துக்கொள்வதா?—என்ற விவாதம் மட்டும் தான் இந்தியா பூராவும் நடைபெறுவதாக எண்ணிக்கொண்டிருந்தார்கள்! அந்த விவாதத்துக்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது; காந்தியாருடைய கல்லறையோடு அவருடைய எண்ணத்தையும் புதைத்துவிட்டு, இவர்கள் இப்பொழுது புது எண்ணங்களைத் தோற்றுவித்துக்கொண்டிருக்கிறார்கள், 'தேவநாகிரி இந்தி' என்று சட்டத்திலே எழுதிக்கொண்டார்கள்,

"அதற்கு அடுத்தாற்போல். இப்பொழுது கிளம்பியிருப்பதாக அவர்களுடைய எண்ணம்—'இந்தியை எப்பொழுது கொண்டுவருவது; 1965-ம் ஆண்டிலா? 1975-ம் ஆண்டிலா, 1980-ம் ஆண்டிலா, 1990-ம் ஆண்டிலா?—இதைப்பற்றித்தான் இந்திய மக்கள் கவலைப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள்' — என்று அவர்கள் எண்ணுகிறார்கள்,

"ஆகவே, இரண்டே விவாதம் - ஒன்று முடிந்துவிட்ட விவாதம் கொஞ்சம் இப்பொழுது உயிர் பிடித்துக்கொண்டிருக்கின்ற விவாதம் 1965? 1975? 1980? 1990? – என்று! இதைத் தவிர இந்தியாவிலே வேறு எந்தவிதமான கருத்துமே இல்லை என்று அவர்கள் சாதிக்க முயன்றுகொண்டிருக்கிறார்கள்.

"இந்த நிலைமைக்கு என்ன காரணம் என்று பார்க்கும்பொழுது தான், தமிழ் நாட்டு மண்ணிலேயிருந்து வரிசை வரிசையாக டில்லிக்குத் திரும்பி வந்த பெரியவர்களைப்பற்றி நாம் எண்ணும்போது, நாமாகத் தலை குனிந்துகொள்கிறோம்

**"இங்கிருந்து போன எவரும் தமிழர்கள் என்ன எண்ணுகிறார்கள் என்று எடுத்துச் சொல்லுவதற்கு மிரண்டு வந்திருக்கிறார்கள்; தமிழர்கள் எண்ணத்தை அங்கு சொன்னால் 'உதை' கிடைக்குமோ என்று பயந்து இங்கே திரும்பி உருண்டு வந்திருக்கிறார்கள்.**

"அங்கு போய் மிரண்டவர்கள், 'இங்கு வந்து தைரியம் பெற்று, 'அங்கு நேரு என்ன சொல்லுகிருர் தெரியுமா? பந்த் என்ன சொல்லு கிருர் தெரியுமா?—இதெல்லாம் நடக்காது; ஏற்றுக்கொண்டுதான் தீரவேண்டும் எனக் கூறுகிருர்கள்'—என்று!

'இந்த மிரட்டலேத்தான் இங்கு கொண்டுவந்தார்களே தவிர, நம்முடைய உள்ளக் குமுறலே அங்கு கொண்டுபோவதற்கு இவர் களினுலே முடியவில்லே.

"இன்றைக்கும் அங்கிருக்கும் காங்கிரசு நண்பர்கள் செய்து கொண்டிருக்கின்ற காரியம், ஆதிக்கவெறியர்களுடைய காரியத்தை விட—தமிழ் நாட்டைத் தலேகுனிய வைக்கக்கூடிய காரியமாகும்; இன்றைக்கு இவர்கள் அங்கே ஒரு புதிய தைரியம் பெற்று புது விண்ணப்பம் போடுகிருர்கள்; 'இந்தியை 1965-ல் கொண்டுவருவ தாக எண்ணுகின்ற நேருபிரானே! தயவு செய்து, 1990-ல் கொண்டு வாருங்கள்; பிரார்த்தித்துக்கொள்ளுகிரேம்'—என்று கையெழுத்துப் போடுகிருர்கள்.

"இவர்கள், மிகுந்த தைரியம் வந்து, இந்த 10 வருட காலத்திலே செய்த அபார காரியம், விண்ணப்பம் போடுகின்ற காரியம்! இத ுலே தமிழர்களுக்கு வந்திருக்கின்ற இழுக்கை, நீங்கள் எண்ணிப் பார்க்கவேண்டும்.

"ஆச்சாரியாரவர்கள் அன்றையத்தினம் மிக நன்ருகக் கேட்டார் கள்—'காங்கிரஸ்காரர்களே, நெஞ்சிலே கை வைத்துச் சொல்லுங் கள்; இந்தி 1990-லே வரவேண்டுமென்று நீங்கள் ஆசைப்படு கிறீர்களா?'—என்று? அவர், காங்கிரஸ்காரர்களுடைய உள்ளும் புறமும் அறிந்தவர்; ஆகவே, உரிமையோடு கேட்டார்.

"உள்ளபடியே காங்கிரஸ் நண்பர்கள், நம்மிடையே உரையாடும் போது சொல்லுகிருர்கள்—'இந்தி தேவையில்லே' என்று! ஆனல், விண்ணப்பத்திலே எழுதுகிருர்கள்—'1990-ல் கொண்டு வாருங்கள்; 1965-லே வேண்டாம்'—என்று! எழுதுவதோடு நின்றுவிடுகிருர்களா? பிறகு வந்து, 'எப்படி நம்முடைய வேலே?'' என்று கேட்டு நம்மிடத் திலே சபாஷ் பட்டம் பெறுவதற்கு வந்து நிற்கிருர்கள்; 'இதில்

என்னய்யா, அபாரமான வேலையிருக்கிறது ?' என்று கேட்டால் 'அதுதான் உங்களுக்கு அனுபவமில்லை; இது உங்களுக்குத் தெரியாது; எங்களுக்கல்லவா தெரியும்? நீங்கள் வரட்டுக் கூச்சல் போடுவதனாலே இந்தி நின்றுவிடுமா?' என்கிறார்கள்

" 'எங்கே உங்கள் அனுபவச் சாற்றைக் கொஞ்சம் பிழியுங்கள்' என்றால், விளக்குகிறார்கள்—'இப்பொழுது என்னய்யா வருஷம்?'= '1957'—'1990-க்கு இன்னும் 33 வருடங்கள் இருக்கின்றன; இந்த 33 வருடங்கள் வரையிலே இந்திக்கு நாம் வாய்தா வாங்கிவிட்டால், 33 வருடங்கள் நாம் இருக்கப்போகிறோமா? உலகிலே தப்பித்தவறி இருந்தாலும் அரசியலிலே, நீடிக்கப்போகிறோமா? ஆகவே 33 வருடங்களுக்கு நம்முடைய அபார இராச தந்திரத்தின் விளைவாக ஒரு வாய்தா வாங்கிவிட்டால், அதற்குப் பிறகு வருகிறவன் - அவனுக்குச் சாமர்த்தியமிருந்தால் அவனும் ஒரு 30 வருடம் வாங்கிப் பிழைத்துப் போகட்டும்!' - இப்படி அவர்கள் எண்ணுகிறார்களே!

"இவர்களுடைய கோழைத்தனத்தைப் பார்த்துக்கொண்டிருக்கிற இந்த நாட்டு மக்களைப் பற்றி ஏன் அவன் அஞ்சப்போகிறான்' அவனுக்குத் தெரியாதா, 'இவர்கள் உள்ளம் இந்தியை ஏற்றுக்கொள்ளவில்லை' என்பதை அவன் அறியமாட்டானா? ஆனாலும் அவன், பார்த்துப் புன்முறுவல் பூக்கிறான் - 'கோழைகள்! நம்முடைய தர்பாருக்கு வந்தவுடன் எப்படி நடுநடுங்கி, தொடை நடுங்கி வாய்தா கேட்கிறார்கள்' - என்றுதான் எண்ணுகிறான்; 'நாம் எதைச் சுமத்தினாலும் இந்த மக்கள் அதை ஏற்றுக்கொள்வதைத் தவிர வேறு வழியில்லாத வகையற்றவர்கள்' - என்ற கருத்திலே அவன் எதையும் செய்வதற்குத் துணிந்து நிற்கிறான்.

"அவனுக்கு இங்கே நடப்பது எல்லாம் தெரியும்; இவர்கள் உள்ளத்திலே எழுகின்ற எண்ணங்கள் அனைத்தையும் அவன் உணருவான்; உணர்ந்ததற்குப் பிறகு, இவர்கள் சொல்லுகிற இராஜ தந்திரத்திற்கு அவன் இணங்குவானா என்றால், மாட்டான்!

" இந்தச் சமுதாயத்தினுடைய சுயமரியாதை உணர்ச்சியைப் பற்றியும், இங்கு வாழுகின்ற சமுதாயத்தினுடைய உரிமை வேட்கை

யைப்பற்றியும அவன் யாரைக் கொண்டு மதிப்பிடுகிருன்? நம்முடைய மாபெரும் பிரதிநிதிகளை அவன் அன்ருடம் பார்க்கிருன்; அவர்களுடைய யோக்கியதை, அவர்களுடைய தைரியம், அவர்களுடைய அரசியல் நாணயம், நேர்மை இவைகளை வைத்துக்கொண்டு, 'சரி; இவர்களைப் பிரதிநிதிகளாக அனுப்பியிருக்கின்ற சமுதாயம், எவ்வளவு மரக்கட்டைச் சமுதாயமாயிருக்கும்?'—என்று அவன் கணக்குப் போட்டுக்கொள்கிருன

"இந்த நிலைமை, 'நமக்கு இந்திய அரசியலிலே துளியும் மதிப்புக் கிடையாது; வடக்கிலிருக்கின்றவன் நம்மைக் கால் தூசுக்குச் சமானமாக மதிக்கிருன்; புழுப்போல் கருதுகிருன்' என்று உணர்த்துமானுல், அதற்குக் காரணம் நம்முடைய பிரதிநிதிகளுடைய இலட்சணம் அப்படியிருக்கிறது; ஆகவே, அவன் அப்படி நம்மை கணக்குப் போட்டுக்கொண்டிருக்கிருன்.

"இனி நாம், நம்முடைய பிரதிநிதிகளின் மூலமாக அங்கே நமமுடைய குரலை எடுத்துச் சொல்லுவதோ, நம்முடைய உள்ளங்களை அங்கே வெளிப்படுத்துவது என்பதோ, மிகச் சாதாரணமான காரியம் என்று நான் கருதவில்லை.

"இன்றையத்தினம் தென்னுட்டிலே இருக்கின்ற பல நண்பர்கள் ஒப்பாரி வைக்கிருர்கள்; ஓலமிடுகிருர்கள்—'டில்லி சர்க்கார், கவிஞர்களைக் கவுரவிப்பதற்கு ஸ்டாம்பு போடுகிறது; அதிலே துளசிதாசர் இருக்கிருர்; மீராபாய் இருக்கிருள்; இன்னெரு அம்மையார் இருக்கிருர்கள்; எல்லாம் வடநாட்டுப் புலவர்களையும், வடநாட்டுக் கவிஞர்களையும் போட்டிருக்கிருர்கள்; ஐயோ, வள்ளுவரைக் காணேமே! ஐயோ பாரதியைக்கூடக் காணேமே!'—என்று, ஒரு தலையங்கம் எழுதுவதோடு அவர்களுடைய குறை தீர்ந்துவிடுகிறது.

"பிறகு படமெடுக்கிருன்—'1857–1957 சுதந்திரப் போராட்டத்தினுடைய நூற்றுண்டு விழா' என்று; படத்தை மிக ஆவலோடு நமது தென்னுட்டுத் தேசியத் திலகங்கள் நாற்காலியினுடைய ஓரத்திலே

உட்கார்ந்துகொண்டு வெகு சுவையோடு பார்க்கிறார்கள் - அதிலே லாகூர் வருகிறது ; லக்னோ வருகிறது; பம்பாய் வருகிறது; கல்கத்தா வருகிறது, பாட்னு வருகிறது ; பகதூர்ஷா வருகிறார் ; நானுசாகிப் வருகிறார் ; ஜான்சி இராணி வருகிறாள் ; திலகர் வருகிறார் ; தாதாபாய் நௌரோஜி வருகிறார் ; இன்னும் வடக்கே இருக்கின்ற அத்தனை அரசியல் தலைவர்களும், இன்னும் மோதிலால் நேரு, வல்லபாய் படேல், வித்தல்பால் படேல், ஜவகர்லால் நேரு, உத்தமர் காந்தியார் கலந்துகொண்ட பல்வேறு மாநாடுகள், அந்த நேரத்திலே அவரைப் புடைசூழ்ந்து கொண்டிருந்த அபுல்கலாம் ஆசாதைப் போன்றவர்கள், இன்னும் அவர் பக்கத்திலிருந்த கிருபளானி போன்றவர்கள் - இப்படி, வடக்கே இருந்து செத்த தலைவர்கள், இன்னும் இருந்துகொண்டிருக்கிற தலைவர்கள், இருக்கிறாரா இல்லையா என்ற விவாதத்திற்குரிய தலைவர்கள், எல்லா வடநாட்டுத் தலைவர்களும் வரிசை வரிசையாக வருவதை அதிலே காட்டுகிறார்கள்.

"நம்முடைய தென்னாட்டுத் தேசியத் திலகங்கள் - உப்புச் சத்தியாகிரகத்திலே உதைபட்டவர்கள் - ஒத்துழையாமையிலே நொந்து போனவர்கள் - 1942 போராட்டத்திலே கலந்துகொண்டவர்கள் அத்தனைப் பேரும் படத்தை ஆவலோடு பார்க்கிறார்கள்; என்ன நம்பிக்கையோடு பார்க்கிறார்கள தெரியுமா ? 'ஆகா ! நம்மைக் கவுரவிப்பதற்கு நல்ல 'கிளைமாக்ஸ்' - நல்ல உச்சத்தில் கொண்டுவந்து தென்னாட்டைக் காட்டப்போகிறார்கள்' - என்று ! ஆவலோடு பார்க்கிறார்கள் - நல்ல கதையினுடைய உச்சம் வருகிறது - 'கிளைமாக்ஸ்' வருகிறது - 'சுபம்' 'மங்களம்' என்ற பேரும் வருகிறது !

"படம் முடிந்துவிட்டது ; பிறகு இவர்கள், தலையிலே கை வைத்துக்கொண்டு வருகிறார்கள் - 'ஐயோ, இங்கு வடக்கு - தெற்கு என்று பேசியவர்களைப் பார்த்து, வல்லடி வம்பர்கள் என்று சொன்னோமே ; பாரதத்தைப் பிளக்கின்ற பாதகர்களே என்று அர்ச்சித்தோமே ! இப்போது இப்படிச் செய்துவிட்டானே பாதகன் ! ரொம்ப நாளைக்கு முன்னலே நாம் ஆரம்பித்திருக்கவேண்டிய காரியத்தையல்லவா இன்றைக்கு முன்னேற்றக் கழகத்தினர் செய்துகொண்டிருக்கிறார்கள் ?' என்ற எண்ணம் அவர்களுக்கு வருகிறது ; நெஞ்சு பொறுக்குதில்லையே' என்று தலையங்கம் எழுதுகிறார்கள் ; 'யாருக்கு

நஷ்டம்?' என்று மிரட்டிப் பார்க்கிறார்கள்! என்ன பயன்? '1857' என்று புத்தகம் வெளியிட்டிருக்கிறார்கள்; அதில் தென்னாட்டுக்காரர்களைப்பற்றி இல்லை; வ. உ. சி. இல்லை—கட்டபொம்மன் இல்லை—ராஜாஜி இல்லை—ஆந்திரகேசரி பிரகாசம் இல்லை! சொல்லியழுது என்ன பயன்? அவன் நம்மை மதித்தாலல்லவா, அவன் அதிலே நமக்கு இடம் தருவான்? நம்முடைய யோக்கியதை—இலட்சணம் அவர்களுக்கு விளங்குகிறது.

"ஏதோ ஒரு 4 எலும்புத் துண்டுகளைப் தூக்கிப் போடுவதைப் போல், 'நீ ராஜ்ய சபா மெம்பர்; நீ பார்லிமெண்டு மெம்பர்; அமெரிக்காவுக்கு 2 டிக்கட், மனைவியோடு போய் வரலாம், என்று சொன்னால், நாட்டைக் காட்டிக்கொடுப்பதற்கு இன்றைய அரசியலிலே மந்தை மந்தையாக ஆள் கிடைக்கும் போது, அவன் எப்படி உங்களை மதிப்பான்? அவன் எப்படி இந்த நாட்டு மக்களுடைய உள்ளத்துக்கு மதிப்புக் கொடுப்பான்? உரிமை வேட்கைக்கு—உரிமைக் கோரிக்கைக்கு அவன் எப்படி இணங்கி வருவான் என்று கருதுகிறீர்கள்?"

**"இந்த நாட்டு அரசியலில் நம்முடைய சார்பாக—நம்முடைய பிரதிநிதிகள்-நம்முடைய தலைவர்கள் என்று டில்லி 'யாத்திரை' போய்வந்தவர்கள் நமது நாட்டைக் காட்டிக்கொடுத்துவிட்டார்கள் என்பதை உணர்ந்து கொண்டோம்; இனி நாம், இவர்களின் வாயிலாக அல்ல—நேரடியாகவே 'நாம் யார்' என்பதை வடநாட்டவருக்குக் காட்டவேண்டிய காலம் வந்திருக்கிறது - காட்ட வேண்டும்.**

"இன்னும் **90** நாட்களிலே டில்லி மக்கள் சபையில், இந்தி பற்றி அலசிப் பார்த்து—ஆராய்ச்சி செய்து சிபாரிசு செய்வதற்கு நியமிக்கப்பட்டிருக்கின்ற 'உபகமிட்டி' தன்னுடைய

தீர்ப்பை வழங்கப்போகிறது; அந்தத் தீர்ப்பு எப்படி இருக்கும் என்பது இன்றைக்கே நமக்குத் தெரியும். அந்தத் தீர்ப்பைச் சொல்லுவதற்காக அமைக்கப்பட்டிருக்கின்ற 'கண்துடைப்புக் கமிட்டி'யில் பெரும்பான்மையினராக உள்ளவர்கள் இந்திமொழி வெறியர்கள் தான்; அவர்கள் என்ன சிபாரிசு செய்வார்கள் என்பது நமக்கு நன்ருகத்தெரியும்; நாட்களுக்காகக் காத்திருப் போம்.

"90 நாட்களுக்குப் பிறகு அவர்கள் அந்தச் சிபாரிசை வெளியிடப்போகிருர்கள் அந்தச் சிபாரிசு தமிழர்கள்மத்தியிலே மிச்சம் மீதியிருக்கின்ற சுதந்திர உணர்ச்சிக்கு உலே வைக்கக் கூடிய சிபாரிசாக இருக்கப்போகிறது; அந்தச் சிபாரிசு தென் ஞட்டு மக்களே இன்னும் பல நூற்ருண்டுக் காலத்திற்கு வட நாட்டு ஏகாதிபத்திய பீடத்திலே கட்டி வைப்பதற்கான இறுகிய கயிருக இருக்கப்போகிறது. அது வெளிவந்தவுடன், தென் ஞட்டு மக்களுடைய உணர்ச்சி எப்படி யிருக்கிறது—தென் ஞட்டு மக்களுடைய உறுதி எந்த வகையிலே ஏற்பாடாகியிருக் கிறது—வெளிவந்திருக்கிறது' என்பதை, நாம் காட்டத்தான் வேண்டும். இதை மனதிலே கொண்டுதான் இன்றையத்தினம் முன்னேற்றக் கழகம் இந்த, இந்தி எதிர்ப்பு நாளே ஏற்பாடு செய்கின்றது—வெறும் விழா கொண்டாடுவதற்கல்ல; மாலே களேப் பரிமாறிக்கொள்வதற்கல்ல; ஒருவரைப் பார்த்து ஒருவர் 'நலமா?' என்று கேட்டுக்கொள்வதற்கல்ல; 90 நாட்களுக்குப் பிறகு, 'நீ எந்தக் களத்திலே இருக்கப்போகிருய் — நான் எந்தக் களத்திலே போக?'— என்று கேட்பதற்கு, இன்றைக்கு நாம்—தமிழர்கள் அத்தனே பேரும் கூடியிருக்கிருேம்;

"பல நண்பர்கள் கருதிக்கொண்டிருக்கிருர்கள்; கனவு கண்டுகொண்டிருக்கிருர்கள்— 'தமிழ் நாட்டைப் பொறுத்த வரையிலே போராட்டம் நடத்துவதற்கு ஆற்றல் படைத்த

திராவிட முன்னேற்றக் கழகம், சட்டசபையிலேயும் — டில்லி மக்கள் சபையிலேயும் காலடி எடுத்து வைத்திருக்கிறது; ஆகவே, இவர்கள் அந்த நாற்காலி சுகத்திலே சொக்கிப்போய், மறுபடியும் இவர்கள் தங்கள் போர்க் குணத்தைக் காட்ட மாட்டார்கள்' என்று!

"நாம் எங்கு நடமாடினாலும்—டெல்லி தர்பாரிலே நடமாடினாலும்—சென்னைக் கோட்டையிலே உலவினாலும் இந்த நாட்டு மக்களுக்காக உலவிக்கொண்டிருக்கிறோம்; எந்த நேரத்தில் எங்கிருக்க வேண்டும் – என்ன செய்யவேண்டும் என்பது நமக்குத் தெரியும். இந்த நாட்டு மக்களுடைய உள்ளம் என்ன? இந்த மக்களுடைய உரிமைகள் யாவை?— என்பவைகளைப் பற்றியே எண்ணுகின்ற கட்சி திராவிட முன்னேற்றக் கழகமாகும்,

"அண்ணா அவர்கள் திருவண்ணாமலை மாநாட்டிலே குறிப்பிட்டார்கள்— 'எங்களுக்கிருக்கின்ற எசமானர்கள் இரண்டு பேர்; ஒருவர்—எங்களுடைய உள்ளம்; மற்றொருவர்—இந்த நாட்டு மக்கள்'— என்று! இந்த இரண்டு எசமானர்களுக்கும் கட்டுப்பட்டு நடப்பதற்கு நாங்கள் கடமைப்பட்டவர்கள்; ஆகவே, இருக்கின்ற இடம் என்ன என்று பார்த்துக்கொண்டிருப்பவர்கள் அல்ல—உரிமைப் போராட்டத்திலே எந்தக் கட்டத்தை வந்து அடைந்திருக்கின்றோம் என்பதையே கணக்கிட்டுக் கொண்டு வாழுகின்ற இலட்சிய வீரர்கள்— கடமை வீரர்கள்தான் முன்னேற்றக் கழகத்திலே இருக்கிறார்கள்.

"இந்தப் பதவிகளை உதறி எறிந்து விட்டு. எந்த நேரத்திலேயும் சிறைக்கம்பிகளுக்குப் பின்னாலே உட்காருவதற்கோ— துப்பாக்கிக் குண்டுகளுக்கு மார்புகாட்டி நிற்பதற்கோ நாம் தயங்க மாட்டோம்; யாராவது வீண் கனவு கண்டுகொண்டிருந்தால், அவர்களுக்கு இன்றைக்கே நான் எச்சரிக்கை செய்கிறேன் – 'அப்படித் தப்புக்கணக்குப் போட்டு குழியிலே விழாதீர்கள்' — என்று!

"இந்தச் சர்க்கார், உள்ளபடியே இந்த நாட்டு மக்களினுடைய உயிர்களுக்கும் — இந்த நாட்டு மக்களினுடைய இரத்தத்திற்கும் மதிப்பளிக்கின்ற சர்க்காராயிருந்தால், இந்தி விஷயத்திலே தயவு செய்து எச்சரிக்கையோடு நடந்துகொள்ள வேண்டும்என்று நான் கேட்டுக்கொள்கிறேன்; அல்லது இந்தச் சர்க்கார் இரத்த வெறிகொண்டு அலேயும் ஓநாய்களின் கூட்டத்தைச் சார்ந்தவர்களாய் இருந்து, எப்படியும் இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை, இந்த நாட்டு மக்களுக்கு 'இரத்தக் குளிப்பு'த் தரவேண்டுமென்ற வெறிபிடித்தவர்களாய் இருந்தால் தாராளமாக இந்தியோடு வாருங்கள்; எங்களிடத்திலே ஏராளமான இரத்தம் இருக்கிறது.

"நவின அரசியலும்' சனநாயகப் பாடங்களும் இந்த நாட்டு மனிதனே மரக்கட்டையாக்கிவிடவில்லே; மனித உணர்ச்சிகள் அப்படியே இருக்கின்றன. அந்த மனித உணர்ச்சியை சாகடித்துவிட்டு எவனுக்கும் சனநாயகம் தேவையில்லே. அந்த மனித உணர்ச்சியும்--மான உணர்ச்சியும் போய் இந்த நாட்டிலே எவனும் அரசியல் மேதையாய் உலவ வேண்டிய அவசியமில்லே. அத்தனேயும் நம்முடைய உணர்ச்சிகளுக்கு-- நம்முடைய உரிமைகளேக் காப்பாற்றிக் கொள்ளுவதற்கு கையிலே கிடைத்திருக்கிற சாதனங்களே தவிர அந்த உணர்ச்சிகளே சாகடிப்பதற்காக நாம் தேடிக்கொண்ட வம்புகள் அல்ல-- ஓமன்கள் அல்ல என்று, அந்த நண்பர்களுக்குச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்"

"இந்த நாட்டு மக்கள், இந்த விஷயத்திலே அவ்வளவு சாதாரணமாக ஏமாந்து போய்விட மாட்டார்கள், இந்த நாட்டு மக்கள்' விழிப்படைந்து வருகிறார்கள், மற்றொன்றையும்

அவர்கள் தெரிந்துகொள்ள வேண்டும், இந்த ஒரு பிரச்சினை யிலே— இந்தி பிரச்சினையிலே கருத்து வேற்றுமையோடு இந்த மக்கள் தனித்து நிற்கவில்லை, ஏதாவது சொல்லி ஏமாற்றி விடு வதற்கு! உன்னோடு வாழ்ந்தால் எங்களுக்கு உரிமையில்லை— நலன் இல்லை— உலகத்திலே எங்களுக்கு மதிப்பில்லை என்று தெரிந்து, தனிமையிலே வாழ வேண்டுமென்று நெடுங் காலமாகக் கேட்டுக்கொண்டு வருகிறோம்-

"கேட்டுக்கொண்டு வருகின்ற எங்களுடைய நிலை எவ்வ ளவு நியாயமானது, என்று உணராதவர்களும் உணரத்தக்க வகையிலே நீ இந்தச் செயல்களைப் புரிகிறாயே தவிர, ஏதோ குறிப்பிட்ட செயலிலே கருத்து வேற்றுமை கொண்டு நாங்கள் கோபித்துக் கொண்டிருக்கிறோம்— சமாதானம் செய்து விட லாம்— தேநீர் விருந்து அளித்து விடலாம் என்று கருதினால், ஏமாறுவாய் என்று நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

"நெடுங்காலத்துக்கு உன்னாலே கட்டிக்காக்க முடியாது; நீ அமைத்திருக்கின்ற இந்த ஆபத்தான வலையும் உன்னையே தாங்க முடியாத ஒரு வலையாகும்; ஆங்காங்கே அது பட்டுப் பட்டென்று அறுந்துகொண்டிருப்பதை நாங்கள் இங்கே பார்த்துக்கொண்டிருக்கிறோம்,

"அறுந்த இடத்தை மறுபடியும் நீ முட்டுவதற்குள் இன் னொரு இடத்திலே அறுகிறது; ஆகவே, உன்னாலே நெடுநாட்க ளுக்குக் கட்டிக்காக்க முடியாது. இன்னும் உன்னிடத்திலே ஆசையிருந்தால், 'ஓடிப்போ' என்று சொல்வதைவிட உனக்கு வேறு உபதேசம் கிடையாது,

"நான் கேட்க விரும்புகிறேன்— தென்னாட்டிலிருக்கின்ற வர்கள்தான் வகுப்பு வெறியர்கள்? வெள்ளையனுடைய மாஜிக் காதலர்கள் என்று பேசிக்கொண்டிருக்கின்ற வம்பனே! உன்னை நான் கேட்க விரும்புகிறேன்— பஞ்சாபிலே இன்றைக்கு இரண களமாகிக் கொண்டிருக்கிறதே ஏன்? இதே இந்திப் பிரச்சினை

யிலே ஒருவர் மண்டையை ஒருவர் உடைத்துக்கொண்டு நிற்கிறார்களே, என்ன காரணம்? எடுத்துச் சொல்லு— விளக்கம் கூறு! அங்கிருக்கின்ற சீக்கியர்களுக்கு இந்தி தெரியாதா? இந்தி அவர்களுக்கு வராதா? ஏன் அவர்கள் எதிர்க்கிறார்கள்? 'இந்தியைக் காப்பாற்றுகிறோம்; 'ஜெய் இந்தி' என்று கிளர்ச்சி நடத்துகிறார்களே அவர்களுடைய நோக்கமென்ன? ஒரு மொழியை இந்த நாட்டு மக்கள் நல்லதுக்குக் கற்றுக்கொள்ள வேண்டுமென்பதற்காகவா, அவர்கள் வெறித்தனத்தோடு போராடுகிறார்கள்? சீக்கியர்களுடைய புனிதக் குளத்தை அசுத்தப்படுத்துகிறார்கள்? சீக்கியர்களுடைய கோயிலிலே சென்று மனம் புண்படக்கூடிய வகையிலே நடந்து கொள்கிறார்கள்? இந்தி வெறும் மொழிப் பிரச்சினைதானா? என்று கேட்கிறேன்.

"அந்தப் போராட்டத்தினுடைய எதிரொலி தலைநகர் டெல்லிக்குக் கேட்கிறது தலைநகரிலே பார்லிமெண்டு நடந்துகொண்டிருக்கும் போது ஊரடங்குச் சட்டம் போடக்கூடிய அளவிற்கு, அந்த வெறித்தனத்தினுடைய எதிரொலி அங்கே கேட்கிறது, டெல்லியிலே இருக்கின்ற சீக்கியர்களை இந்தி பேசுகின்றவர்கள் அடிக்கின்றார்கள்; டெல்லியிலே இருக்கின்ற சீக்கியர்கள் அவர்களைத் திருப்பித் தாக்க முன்வருகிறார்கள், சர்க்கார் இடையிலே புகுந்து ஊரடங்குச் சட்டம் போடுகிறது, வெறும் மொழிப் பிரச்சினைக்கா இவ்வளவு பெரிய கலகங்கள் நடந்துகொண்டிருக்கின்றன?— என்று கேட்க விரும்புகின்றேன்.

இங்கு வந்து தாளாட்டுப் பாடுகிறாயே— 'இது ஒன்றும் ஒரு பெரிய பிரச்சினையல்ல, சாதாரணப் பிரச்சினை; இது மைதானத்தில் பேசவேண்டிய பிரச்சினையல்ல; ஒரு அறையிலே உட்கார்ந்து விவாதிக்க வேண்டிய பிரச்சினை'— என்றெல்லாம் கூறுகிறாயே, ஏன் அங்கெல்லாம் தலைகள். உருண்டுகொண்டிருக்கின்றன? ஏன் அங்கே இரத்தம் ஆறாகப் பெருகி ஓடிக்கொண்டிருக்கிறது? விளக்கம் சொல்,

"டெல்லி மக்கள் சபையில், இந்தியை எதிர்த்து முன்னேற்றக் கழகம் பேசியதற்குப் பிறகு கழக நண்பர்களைச் சந்தித்தார்கள்— பல மாநிலத்தைச் சேர்ந்தவர்கள்— மராட்டியத்தைச் சேர்ந்தவர்கள் —இன்னும் வங்காளத்திலிருந்து வந்த சில உறுப்பினர்கள்— சந்தித்து அவர்கள் என்ன கூறுகிறார்கள்? 'இந்தி எங்களுக்கு வரும்; எங்களிலே வெகுபேருக்கு இந்தி தெரியும்; ஆனாலும், நாங்கள் இந்தியை ஏற்றுக்கொள்வது பற்றி இப்பொழுது புனராலோசனை செய்கிறோம்; என்கிறார்கள்; முன்பு இந்தியாவினுடைய தேசிய ஐக்கியத்திற்கு இந்தியை தேசீய மொழியாக ஏற்க வேண்டுமென்று சத்தம் போட்டவர்கள் தான் நாங்கள்; ஆனால் 10 வருட கசந்த அனுபவத்திற்குப் பிறகு தெரிகிறது— 'அது வெறும் மொழிப் பிரச்சினையல்ல; இந்தியாவின் தேசீய ஐக்கிய சம்பந்தப்பட்ட பிரச்சினைஅல்ல; இந்தியத் துணைக் கண்டத்து ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டிருக்கின்ற, இங்கிருக்கின்ற ஒரு கூட்டத்தினுடைய சூழ்ச்சி என்பதை நாங்கள் உணருகிறோம்! இப்போது நாங்கள் மறுபடியும் யோசிக்கிறோம்'— என்று அவர்கள் கூறினார்கள்.

"இன்றையத்தினம் நாம் ஒன்றே ஒன்றிலே மிக எச்சரிக்கையாக இருக்கவேண்டும்; நான் மிகமிக வருந்துகிறேன்— தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் தலைவர் திருவாளர் இராசாராம் நாயுடு அவர்கள் ஒரு இடத்திலே பேசினார் என்று பத்திரிகையிலே பார்த்தேன்— 'இந்தியைத் தமிழர்கள் கற்றுக்கொள்ள வேண்டும்; இந்தி மிகச் சுலபமான மொழி'—என்று; நண்பரே, உமக்காக நான் பலதடவை பரிதாபப்பட்டிருக்கிறேன்; ஆனால் இந்த முறை பரிதாபப்படுவது மிக மிக அதிகம் என்று நான் சொல்லிக் கொள்கிறேன் இப்பொழுது இந்த நாட்டு மக்கள் மலைப்பது, 'இந்தியைக் கற்றுக் கொள்வது சுலபமா, கடினமா என்ற பிரச்சினையில் அல்ல; இந்தி நமக்கு ஏன்?'— என்றுதான் தமிழகம் கேட்கிறதே தவிர, 'இந்தியை நம்மால் கற்றுக்கொள்ள முடியுமா?'— என்ற பிரச்சினையிலே நாம் இன்றையத்தினம் காலத்தை செலவிட்டுக் கொண்டிருக்க வில்லை.

'டெல்லியில் கூட, நான் பேசி முடித்த பிறகு உத்தரப் பிர தேசத்தைச் சேர்ந்த ஒரு உறுப்பினர் வந்து என்னிடத்திலே பேச்சுக் கொடுத்தார் — என்ன, இந்தியே வேண்டாமென்றே சொல்லுகிறீர் களா?' — என்று பேச்சை ஆரம்பித்தார்; பிறகு கொஞ்சம் பரிவோடு 'சம்பத்ஜி' என்று என்னை அவர் அழைக்க ஆரம்பித்துப் பேசினர் — 'இந்தியாவிலேயே மிகவும் கெட்டிக்காரர்களல்லவா, தென்னாட்டுக் காரர்கள், அதிலும் குறிப்பாகத் தமிழர்கள், மிகவும் கெட்டிக்காரர்க ளாயிற்றே: உலகத்திலுள்ள அத்தனை மொழிகளையும் கூட கற்றுக் கொள்வது என்று மனம் வைத்து விட்டால் ஒரு நொடிப்பொழுதி லேயே அவர்கள் அவற்றில் புலவர்களாகி விடுவார்களே' — என்று, நம்மை வெகு உயரத்திலே கொண்டுபோய் உட்கார வைத்தார்; பிறகு சொன்னர் — 'இந்தியைப்பற்றி, நீங்கள் என்ன கருதுகிறீர்கள்? இந்தி மிக மிக எளிமையான மொழி; இன்றைக்கு நீங்கள் இந்தியிலே 'ஆனு,' 'ஆவன்னு' படிக்க ஆரம்பித்தால் — அரிச்சுவடியைப் படிக் கத் துவக்கினல், இன்னும் மூன்றே ஆண்டுகளிலே அதிலிருக்கின்ற இலக்கியங்கள், காவியங்கள் அனைத்தையும் படித்து முடித்து விட லாம்; 3 ஆண்டுகளுக்குப் பிறகு படிப்பதற்கு உங்களுக்கு பத்திரிகை தவிர வேறு இந்தியில் எதுவுமிருக்காது; அவ்வளவு சுலபமான மொழி; இவ்வளவு எளிதிலே நீங்கள் கற்றுக்கொள்ள முடியும். ஏன் மறுக்கிறீர்கள்?' — என்று, இங்கு துணிவிற்கும் போது எவ்வளவு லாவகமாகப் பேசுகிறார்களோ அதை விட லாவகமாக அவர் என் னிடத்திலே இந்தியை விலை பேசினர்,

"இந்தியில் இன்றைக்கிருக்கின்ற பெரிய இலக்கியம், பெரிய காவியம் துளசிதாசருடைய இராமாயணம்; நான் அவருக்குச் சொன் னேன் — 'இதுதான் உங்களுடைய பெரிய காவிய — தனிப்பெருங் கலை என்று இருப்பது; ஆனல் நான் பிறந்து வளர்ந்த நாட்டி னுடைய மொழியிருக்கிறதே, அந்த மொழியினுடைய இலக்கியச் செல்வம், ஒரு பெருங்கடல்; 'தமிழிலேயுள்ள எல்லா இலக்கியங்

களும் உனக்குத் தெரியுமா? என்று ஒரு தமிழ்நாட்டுப் புலவனைக் கேட்டால்; அவன் எவ்வளவு திமிர்பிடித்தவனாக இருந்தாலும், 'தெரியும்' என்று தைரியமாகச் சொல்லமாட்டான்; எவருக்குமே தெரியாது. ஒருவன் இராமாயணத்தைப் படிக்க ஆரபித்தால், அவன் அதிலேயே புகுந்து கொள்வான். பிறகு அவனை வெளியே கொண்டுவருவது என்பது வெகு கஷ்டம்; சிலப்பதிகாரத்துக்குள் புகுந்தால் ஆயுள் பூராவும் அவன் 'சிலப்பதிகார சின்னக்கண்ணு' என்று பெயர் வைத்துக்கொள்வானே தவிர, வேறு எதிலும் அவன் கவனம் செலுத்த முடியாது; திருக்குறளிலே புகுந்தால் அப்படித் தான்; ஒருவர் சங்க இலக்கியங்களை மட்டுமே சிறப்பாகக் கருதி, அதிலே இருக்கும் அழகுகளையும் அணிகளையும் ஆயுள் பூராவும் ஆராய்ந்து, 'ஐயோ, இன்னும் பல காண்பதற்கு வயதில்லையே' என்று வருந்திச்சாவார், இப்படி அங்கிருக்கின்ற இலக்கியத்தில் உள்ள ஒவ்வொரு பகுதியும், ஒருவருடைய ஆயுளையே கேட்கும்— தன்னுடைய அழகைத் தெரிவிப்பதற்கு! அப்படிப்பட்ட இலக்கியச் செறிவு படைத்த மொழியைச் சேர்ந்த நான், மூன்றே வருடங்கள்— அதற்கப்புறம் கற்பதற்கு ஒன்றுமே இல்லை என்ற மொழியை— ஒன்றுமில்லாத மொழி என்று தெரிந்துகொள்வதற்காகவா நான், என்னுடைய 3 வருடங்களை வீணாக்குவது?— என்று அவரிடத்திலே கேட்டேன்.

"ஏன் நான் இதைக் குறிப்பிடுகிறேன் என்றால், தமிழ் நாட்டிலிருக்கின்ற சில அரசியல் சழக்கர்கள், 'இந்தி மிக எளிது; கற்றுக் கொள்வோம் தமிழர்களே' என்று பாட்டுப்பாட ஆரம்பித்திருக்கிறார்கள்; 'எளிதாயிருந்தால், எதையுமே நாம் ஏற்றுக்கொள்வதா?'— என்று கேட்க விரும்புகிறேன்.

"இந்த நாட்டில் ஒவ்வொரு காரியத்தையும், நியாய அநியாயத்தையும், நம்முடைய மான மரியாதையையும் பார்த்துத்தான் ஏற்றுக்

கொள்கிறோமே தவிர, மிக எளிது என்பதினாலே எல்லோரும் ஒரு காரியத்தைச் செய்ய ஆரம்பித்தால் இந்த நாடு என்ன ஆவது என்று நான் கேட்க விரும்புகிறேன். 'அது ஏன்?'— என்ற கேள்விக்கு விடையில்லை; அப்படி என்ன— அது இல்லாததனாலே இன்றைக்கு உலகத்திலே நாம் கடை கெட்டவர்களாய்ப் போய்விட்டோம்?

"வி கே. கே, மேனன் காஷ்மீர் பிரச்சினையைப்பற்றி கர்ஜனை செய்வதானாலும் ஆங்கிலத்திலேதான் செய்கிறார்; டி. டி. கிருஷ்ணமாச் சாரியார் 'பகவதி பிட்சாந்தேகி' என்று உலகத்திலே 'பிச்சை' எடுப் பதானாலும் ஆங்கிலத்திலேதான் கேடகிறார்; பண்டித நேரு ஜப்பா னிலே இருக்கின்ற யானையைப்பற்றி விசாரிப்பதானாலும் ஆங்கி லத்திலேதான் விசாரிக்கிறார்; இப்படி நீ உலகத்திலே உலவி வருவ தற்கும், உலகத்து மக்களிடத்திலே அரசியல் 'பழமை' பேசுவதற் கும், உலகத்து மக்கள் மத்தியிலே சென்று 'எனக்கு ரொம்பக் கஷ்டமா யிருக்கிறது. அரசியலிலே, இந்தியா இப்பொழுது ரொம்பவும் சிரமப் பட்டுக்கொண்டிருக்கிறது; படைபலத்தைப் பெருக்கிக்கொண்டு திட் டங்களைப் போடமுடியாமல் தவிக்கிறோம்; ஏதோ உங்களால் ஆன தைக் கொடுங்கள்!'— என்று கேட்பதற்கும் உனக்கு ஆங்கிலம்தான் தேவையாயிருக்கிறது.

"இந்த நிலையில், இன்றைக்கு இந்தியத் துணைக்கண்டத்து அரசி யல், ஆங்கிலத்திலே வெகு சுலபமாக நடந்துகொண்டிருக்கிறது; ஆங்கிலம் கற்பதனால் இனி ஆங்கிலேயனுக்கு நம்முடைய அரசியல் உரிமையை அடகு வைக்கவேண்டுமென்ற காலமும் மலையேறிப்போய் விட்டது; உலகத்திலே ஆங்கிலம் பேசுகின்ற எத்தனையோ அரசுகள் சுதந்திரமாக வாழ்ந்துகொண்டிருப்பதைக் காணுகிறோம். சுதந்திர மாக வாழ்ந்து கொண்டிருப்பதை மட்டுமல்ல — ஆங்கிலத்தினுடைய பகுதியான பிரிட்டனை இன்றைக்குத் தன்னுடைய காலடியிலே வைத்

துக்கொண்டிருக்கக் கூடிய அளவிற்கு செல்வத்திலும், அதிகாரத்திலும் பெருத்திருக்கின்ற அமெரிக்காவைப் பார்க்கிறோம்; ஆங்கிலம் அங்கே வழங்குகின்றது. கனடா இன்றைக்கு விடுதலை பெற்ற நாடாகத்தான் விளங்குகின்றது; ஆங்கிலம் அங்கே வழங்குகின்றது; ஆஸ்திரேலியாவிலே வழங்குகின்றது; இன்னும் ஐரோப்பாவிலே இருக்கிற பல்வேறு நாடுகளிலே ஆங்கிலம் கட்டாயப் பாடமாகப் போதிக்கப்படுகிறது; ஆகவே, ஆங்கிலம் நமக்கு துணை நிற்கிறது; ஆங்கிலம் படிப்பதினாலே புதிய அவமரியாதை ஒன்றும் வந்துவிடப் போவதில்லை; இருக்கின்ற மரியாதைக்கு ஆபத்தொன்றும் வரப்போவதில்லை; இருந்தாலும், நீ 'இந்தி படி' என்கிறாய்; அதிலே இலக்கியமும் கிடையாது— உபயோகமான எதுவும் கிடையாது! ஆனாலும் நீ, 'படி' என்கிறாய்; ஏன் படிக்கவேண்டும்? எதற்காகப் படிப்பது? உன்னுடைய ஆதிக்கத்தை ஏற்றுக்கொள்கிறோம் என்பதைத் தவிர, இதற்குப் பின்னாலே இருக்கின்ற தத்துவம் என்ன? இதற்குப் பின்னாலே இருக்கின்ற அரசியல் அவசரமோ, தேவையோ என்ன?—என்றுதான் நான் கேட்கப் பிரியப்படுகிறேன்.

"இன்றையத்தினம் மக்கள் சபையிலே ஏன், பண்டித நேருவோ, மற்றவர்களோ இந்தியிலே பேசுவதுதானே? மற்றவர்களை விட்டு இந்தியிலே பேசச் சொல்லுகிறார்கள்; நேரு பேசுவதானால் ஆங்கிலத்திலேதான் பேசுகிறார்! பந்த் பேசுவதானால் ஆங்கிலத்திலேதான் பேசுகிறார்! யார் தங்களுடைய பேச்சை உலகம் கவனிக்கவேண்டுமென்று கருதுகிறார்களோ அவர்களெல்லாம் ஆங்கிலத்திலேதான் பேசுகிறார்கள்! ஏன்?—தங்களுடைய பேச்சு உலகம் பூராவும் செல்லவேண்டும்! அந்தப் பேச்சின் மூலம்தான் தங்களுடைய உள்ளத்தை உருவாக்கிக் காட்டமுடிகிறது என்ற கவலையினாலே அவர்கள் அப்படிப் பேசிக்கொண்டிருக்கிறார்கள்.

"ஆனால் அது என்ன மாயம்? 1965-லே ஆங்கிலமே இல்லாமல் அந்த இடத்திலே இந்தியைக் கொண்டுவந்துவிட வேண்டுமென்று

ஒரு இடத்திலே சொல்லி, மக்களுடைய போலி கௌரவத்தைப் பயன் படுத்துவது! இன்னொரு இடத்திலே, 'ஆங்கிலத்தையும் வைத்துக் கொள்வோம்' என்று குழப்புவது; ஆகவே, இந்தக் குழப்பத்திற்குப் பின்னாலே நமக்கு நன்றாகத் தெரிகின்ற உருவம் ஆதிக்கவெறி! கொஞ்சம்கூட சந்தேகத்திற்கு இடமில்லாத ஆதிக்கவெறிதான் இதற்குப் பின்னாலே இருக்கிறது.

"இந்த இந்தி ஏகாதிபத்தியத்தைப் பற்றிய பேச்சு நமக்கு நன்றாகக் காதிலே விழுகிறது. இதை நாம் ஏற்றுக்கொள்ளமுடியாது என்பது மட்டுமல்ல; கடுமையான எதிர்ப்பை—உறுதியான எதிர்ப்பை நாம் காட்டித் தீரவேண்டும்; இதிலே நமக்கு உயிர் பெரிதல்ல! 'இந்தக் காலத்திலே வாழ்ந்திருந்த தமிழர்கள் கோட்டை விட்டுவிட்டார்கள்' என்று, பல நூற்றாண்டுகளுக்குப் பின்னால் வருகின்ற மக்கள் நம்மீது பழி சுமத்தக்கூடிய நிலையிலே நாம் இந்த நேரத்தில் தவறு செய்துவிடக்கூடாது அத்தனைப் பேருடைய சக்தியும் ஒன்று திரண்டு, அவர்களை நாம் கேட்டுத் தீரவேண்டும்?

"இதிலே நமக்கு இருக்கின்ற இன்னொரு ஒரே ஒரு வாய்ப்பை நான் சொல்லிவிட விரும்புகிறேன்,—இந்தப் பிரச்சினையில் நமக்குக் கிடைக்கின்ற வெற்றி—தோல்வி நமக்கு விடுதலை இன்னும் எவ்வளவு தூரத்திலே இருக்கிறதென்பதை நிர்ணயிக்கப் போகிறது; வெறும் இந்திப் பிரச்சினை மட்டுமல்ல இந்த நேரத்திலே வந்து நிற்பது; இந்த வெறியர்கள் முழுச்சக்தியோடு இந்தியைத் திணிப்பார்கள். நாம், இந்த நேரத்தில் தமிழர்களுடைய விழிப்புணர்ச்சியைப் பயன்படுத்திக் கொண்டு விடுதலைப் போராட்டத்தினுடைய முதல் அத்தியாயத்தைத் தொடங்கினால், நிச்சயமான வெற்றி—நமக்கு நிரந்தரமான வெற்றி உண்மையிலே கிடைக்கும் என்பதை இந்த நேரத்திலே நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இந்தப் பிரச்சனையில் யாரும் மந்தப் போக்கினைக் காட்டிவிடாமல், சின்னப் புத்தியை வெளிப்படுத்

திக்கொண்டு இந்த நேரத்தில் குறுக்கே ஓடிக்கொண்டிருக்காமல் எல்லோரும் ஒன்றுபட்டு நின்று, நம்முடைய சக்தியை வெளிப்படுத்தி —உறுதியை வெளிக்காட்டி அவர்களுடைய இந்தி ஏகாதிபத்தியத்தினுடைய கடைசி சவாலுக்கு நாம்--தமிழர்கள் நல்ல பதிலைத் தரவேண்டுமென்று உங்களைக் கேட்டுக்கொள்கிறேன்.''



# முழக்கம்



"இந்தப் பகுதியில் மறைந்த மாவீரன் கே. வி. கே, சாமி யின் பெயரால் அமைக்கப்பட்டிருக்கிற மன்றத்தின் சார்பில் நடைபெறுகிற இந்தக் கூட்டத்தின் வாயிலாக உங்களை யெல் லாம் சந்தித்துச் சில வார்த்தைகள் சொல்லும் வாய்ப்புக் கிடைத்தமைக்காக நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன்.

"இதே வட்டத்தில் சில மாதங்களுக்கு முன்பு கூட்டம் ஏற் பாடாகி, மழை வந்த காரணத்தினுலே இடையில் கூட்டம் தடைப்பட்டு விட்டது என்பதை இங்கே நண்பர்கள் நினைவு படுத்தினுர்கள். அந்தக் கூட்டத்திற்குப் பிறகு எவ்வளவோ நிகழ்ச்சிகள் இந்தியத் துணைக்கண்டத்து அரசியலில் நடை பெற்றிருக்கின்றன.

"நாம் உள்ளபடியே சில மாதங்களுக்கு முன்பு என்ன எண்ணிக்கொண்டிருந்தோம்? 'ஆட்சியில் இருப்பவர்களுக்கு நியாயம் தெரியாத காரணத்தினுலேயே, எதிர்மாருகப் பேசு கிருர்கள்; நாம் நியாயத்தை எடுத்துச் சொல்லி விட்டால் அந்த நல்லவர்கள் வழிக்கு வந்துவிடுவார்கள்' என்று, எண்ணி அப்படி எடுத்துரைக்கின்ற கலையிலேயே நாம் அதிகமான அளவுக்கு ஈடுபட்டுப் பணியாற்றி வந்தோம்; ஆனுல், இன்று அவர்கள் உண்மைச் சொருபத்தைக் காட்டிவிட்டார்கள்!

"டெல்லியில் இருக்கிறவர்களானாலும், அவர்களுடைய பாதந்தாங்கிகளாக இங்கே இருக்கிற காங்கிரசு எடுபிடிகளாக இருந்தாலும், எல்லாருமே, நம்மை கேவலம் வெறும் சோளத் தக்கை என்று எண்ணிக்கொண்டு செயலாற்றி வருகிறார்கள்! இனி அவர்களுக்கு நியாயத்தை எடுத்து சொல்லுவதைக் கொஞ்சம் நிறுத்திக்கொண்டு நம்முடைய நியாயத்தை எப்படி நிலை நாட்டுவது என்பது பற்றி யோசிக்க வேண்டிய கட்டம் நமது அரசியல் கூடத்தில் ஏற்பட்டிருக்கிறது, அது மிகவும் சுலப மான காரியமல்ல என்பது நமக்கு நன்றாகத் தெரிகிறது!

"டெல்லியிலிருக்கிறவர்களும் சென்னையில் இருக்கிற ஆட்சியாளர்கள் அத்தனை பேரும் சில மாதங்களுக்கு முன்பு நமது எண்ணங்களை மதிப்பவர்கள் போல்— உரிமைகளைத் தர முயற்சிக்கிறவர்கள் போலப் பசப்பி வந்தார்கள்; ஆனால் அவர் கள் கூடிப் பேசித் திட்ட மிட்டுச் சதிசெய்திருக்கிறார்கள் என் பது நமக்கு இன்றையத்தினம் தெளிவாகத் தெரிகிறது; அத னால் நீங்கள் என்ன சத்தம் போட்டாலும் கவலையில்லை; எங்க ளுக்கு அடிமைகள் நீங்கள்; நாங்கள் கட்டளைகளையிடுவோம் நீங்கள் அதைச் செய்யவேண்டும்' என்ற போக்கிலேயே அவர் கள் நம்மிலிருந்து வேறுபட்டு தங்களுடைய திட்டத்தைச் செயல் படுத்த ஆரம்பித்து விட்டார்கள்!

"நம்முடைய இயக்கம் என்ன செய்யும் என்பது ஆட்சியாளர்களுக்கு நன்கு புரியும்; ஆனாலும் அவர் கள் சூடுபடுகின்ற வரையில் கொஞ்சம் மதமதப்பாகத் தான் இருப்பார்கள்!

[ "சில நாட்களுக்கு முன் முதலமைச்சர் காமராசர் அவர் கள் தஞ்சை மாவட்டத்தில் சுற்றுப்பயணம் செய்தார்; அப்

பொழுது நானும் அந்த மாவட்டத்தில் சுற்றுப்பயணம் செய்தேன்; இரண்டுபேரும் ஒரே நாளில் ஒரே இடத்தில் மோதிக் கொள்ள, அதனுல் சில விரசமான நிகழ்ச்சிகள் நடைபெற்று விட்டன,

''அந்தக் கூட்டங்களில் காமராசர் என்ன பேசினுர் என்பதை நீங்கள் ஓரளவு பத்திரிக்கை வாயிலாக அறிந்திருந்தாலும், பத்திரிக்கைகள் போடுவதற்குப் பயந்து விட்டு விட்ட செய்திகளை உங்களுடைய கவனத்திற்குக் கொண்டு வருவது என்னுடைய கடமையென்று கருதி நான் அவைகளை எடுத்துச் சொல்ல விரும்புகிறேன்.

''காமராசர் தஞ்சையில் பேசும் போது, திராவிட முன்னேற்றக்கழகம், நாங்கள் இரட்டைக் குழல் துப்பாக்கி; எங்களை யாரும் எதுவும் செய்ய முடியாது' என்று பேசுகிறது என்று குறிப்பிட்டார்; ஆனுல் அந்த இரட்டைக் குழல் துப்பாக்கியில் ஒன்றை முறித்துப் போட்டுவிட்டோம் என்ற தைரியத்தால் அவர் நம்மை வம்புக்கிழுத்துப் பேசியிருக்கிருர்! 'அண்ணுதுரை வைத்திருக்கும் துப்பாக்கியில் தோட்டாக்கள் இல்லை; இதோ நான் வைத்திருக்கும் துப்பாக்கியில் தோட்டாக்கள் இருக்கின்றன'— என்ற முறையில் போலீசுப் படையைக் காட்டிப் பேசியிருக்கிருர்! இந்த மமதைப் பேச்சு, திடீரென்று வெளியிலே வெடித்து விழுந்து விட்ட ஒன்றல்ல; அவருடைய மனம் எவ்வளவு கொடியது என்பதை எடுத்துக் காட்டக் கூடிய தொரு வாசகமாகும்!

**அமைச்சர் பதவியில் இருப்பவர்கள் இப்படி மக்களை அலட்சியப்படுத்திப் பேசியதையும் அதனுல். அவர்கள் அனுப**

வித்த கொடுமைகளையும் சரித்திரம் நன்றாக எடுத்துக் காட்டுகிறது!

தம்முடைய போலீசைப் பற்றியும், நம்முடைய திட்டங்களைப் பற்றியும், அரசியலில் தாம் கையாளவேண்டிய முறைகளைப்பற்றியும், சிந்திக்கத் தவறிவிட்டார் காமராசர்.

"நமக்குத் துப்பாக்கிகளையும் தெரியும்--தோட்டாக்களையும் தெரியும்-- அந்தத் தோட்டாக்களை நம்பி அழிந்த தொடை நடுங்கிகளின் வரலாறும் நன்றாகத் தெரியும்!

காமராசர் இந்தச் சரித்திரத்தைப் படிக்காத காரணத்தாலே அவருக்கு இலவசமாக இந்தப்பாடத்தையும் அளிக்க முன்னேற்றக்கழகம் சித்தமாக இருக்கிறது!

"பிரெஞ்சு நாட்டில் லூயி மன்னன், மக்கள் உரிமைக் கிளர்ச்சி செய்த நேரத்தில் ஏளனம் செய்தான்; சுட்டுத் தள்ளி விடுவேன்' என்றான்; மக்கள் ஏதாவது உரிமை முழக்கம் எழுப்பினால் அடித்துச் சுட்டுத்தள்ளுங்கள்' என்று உத்தரவிட்டுக் கொண்டிருந்தான்; இராணுவத்தை விட்டு மக்களைச் சுட்டுத் தள்ளினான்!

"புரட்சி அந்த நாட்டில் வலுவடைந்த நேரத்தில்-- மன்னன் கடுமையான ஆணை பிறப்பித்த நேரத்தில், இராணுவத்தினர் என்ன செய்தனர் என்றால் 'இத்தனை நாள் மன்னன் இராணுவமாக இருந்தோம்; இன்று மக்கள் இராணுவமாக இருப்போம்' என்று சொல்லி, 'எங்கே மன்னன்?' என்று தேடிப்பிடித்து, மக்களுக்குச் செய்த அநீதிகளுக்குத் தண்டனை அளித்தார்கள்-- என்று வரலாறு காட்டுகிறது.

"இவ்வரலாற்றினை, காமராசர் படித்திருக்க நியாயமில்லை; இருந்தாலும் இப்படிப்பட்ட பதவியில் இருப்பதால், இது போன்ற வரலாறுகளைக் கொஞ்சம் படிக்கச் சொல்லிக் கேட்டு, அதை அவர் கவனிக்க வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

**"திராவிட முன்னேற்றக் கழகத்தைக் கேவலம் கிள்ளுக்கீரையாக கருதுகிறார்! மக்களை ஆட்சியின் அதிகாரத்தினால் மிரட்டுகிறார்! இதற்கு அவர் தரவேண்டிய விலை ஒன்று உண்டு-- அதற்கான நாள் விரைவில் அறிவிக்கப்படும்!**

"டெல்லியில் இருப்பவர்களும், காமராசரும் கூடிப் பேசி. யோசித்து, தமிழ் நாட்டு அரசியலை இவ்வளவு கீழ்த்தரமாக நடத்திக்கொண்டிருக்கிறார்கள் என்று நான் உள்ளபடியே கருதுகிறேன். நான் கன்னியாகுமரி வரை சுற்றி விட்டு வருகிறேன்; அங்கே நண்பர்கள் சொல்லுகிறார்கள்— 'இந்த வட்டத்திலுள்ள எம். எல். ஏ., எங்களை மிரட்டுகிறார்; ஆட்களை விட்டு அடித்துக் கொன்றுவிடுவோம் என்று பயமுறுத்துகிறார்கள்' என்று வேதனைப்படுகிறார்கள். இது ஏதோ ஓரிடத்தில் நடக்கிறது என்றுமட்டும் கருத நான் தயாராகயில்லை. டெல்லியில் உள்ள மூலவர்கள் முதல் இங்குள்ளவர்கள் வரை, போலீசு நிலையத்தை, காங்கிரசின் கிளை அமைப்பாகப் பயன்படுத்துகிறார்கள். எத்தனையோ சப்-இன்ஸ்பெக்டர்கள், சர்க்கிள் இன்ஸ்பெக்டர் பதவிக்குஉயர்த்தப்பட்டிருக்கிறார்கள்.காங்கிரசுக் கட்சியைப் பாதுகாப்பதற்காக—காலித்தனத்தில் ஈடுபடுவதற்காக—இப்படிப் போலீசாரைப் பயன்படுத்தத் திட்டமிட்டுவிட்டார்கள் என்று தான் நான் கருதுகிறேன்.

"சர்க்காருக்கு நீதியை எடுத்துரைக்கும் வழக்கறிஞர்களாகத்தான் நாம் இதுவரை இருந்தோம்; ஆனால், இனி நாம் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை நான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்; அவர்கள் நடந்துகொண்டுள்ள முறையைப் பற்றி ஒரு நிகழ்ச்சியை மட்டும் நான் நினைவு படுத்துகிறேன்,

"பாபநாசத்தில் நான் பொதுக் கூட்டத்திற்கு வருவதாக 20 நாட்களுக்கு முன்பே தேதி கொடுத்திருந்தேன்; பாபநாசம் தோழர்களும் அதற்கான ஏற்பாடுகளைச் செய்துகொண்டிருந்தார்கள்; ஆனால் இரண்டு நாட்களுக்கு முன்பு போலீசு அதிகாரி, பாபநாசம் செயலாளரைக் கூப்பிட்டு, இதே தேதியில் இந்த ஊருக்கு முதலமைச்சர் காமராசர் வருகிறார்; ஆகையினால் கூட்டத்தை இரண்டுநாள் தள்ளி வையுங்கள்" என்றாராம்! செயலாளர், நாங்கள் முன்னமேயே விளம்பரம் செய்து விட்டோம்; இந்த நேரத்தில் எப்படித் தள்ளிவைக்க முடியும்? எப்படியாவது கூட்டத்திற்கு நீங்கள் அனுமதியளிக்க வேண்டும்' என்று கேட்டு விட்டு, உடனே என்னிடம் வந்து, சப்—இன்ஸ்பெக்டர் கூட்டத்தைத் தள்ளிவைக்கச் சொல்லுகிறார்' என்றார்; நான் அவரிடம் கேட்டேன்— 'நீங்கள் ஏன் இங்கு வந்தீர்கள்? விளம்பரம் செய்த கூட்டத்தை அரசாங்கம் தடை செய்யுமானால், அந்தத் தடையை மீறுவது என்கிற நமது தீர்மானத்தை மறந்தீரா? அல்லது, சம்பத் மனதில் கோழைத்தனம் இருக்கும் என்று அஞ்சி வந்தீரா? என்றேன்; இது போதாதா, நமது தோழர்களுக்கு? உடனே ஓடி சப்–இன்ஸ்பெக்டரைப் பார்த்தார்; சப் இன்ஸ்பெக்டர் நமது செயலாளரைப் பார்த்து, 'நான்தான் நேற்றே சொல்லிவிட்டேனே மறு

படியும் ஏன் வந்தாய்?" என்றாராம்; உடனே நமது தோழர் நேற்று வந்தது, அனுமதி வேண்டுமென்பதற்காக! ஆனால், இன்று வந்திருப்பது உங்கள் அனுமதி தேவையில்லை என் பதைச் சொல்லிவிட்டுப் போக! நீங்கள் அனுமதி அளிக்கா விட்டாலும் கூட்டம் கட்டாயம் நடைபெறும்! சம்பத் அவர் களும் வருவதாகச் சொல்லி விட்டார் என்று சொல்லிவிட்டு வந்துவிட்டார். உடனே போலீசார் காமராசருடன் கூடிப்பேசி, 'எப்படியும் இவர்கள் கூட்டம் நடத்தி விடுவார்கள்; அனுமதி யைக் கொடுத்து விடுவதுதான் மரியாதை' என்று எண்ணி வீடு தேடிவந்து அனுமதியை வழங்கினார்கள், காமராசர் பேச வேண்டிய நேரம் 6 மணியிலிருந்து 9 மணி வரை! நமக்கு அனுமதி 9 மணியிலிருந்து, 11–30 மணி வரை!

"நாம் கூட்டம் நடத்தக் கூடாது என்ற அவர்கள் முயற்சி பாழ்பட்டுப் போய் விட்டதனால், காமராசருடைய கண்ணில் நமது கழகக் கொடி படாமல் இருக்க வேண்டும் என்பதற்காக நமது தோழர்களிடம், ஒரு மணி நேரமாவது கொடியை அவிழ்த்து விடுங்கள் மறுபடி வேண்டுமானால் நாங்களே கட்டி விடுகிறோம்' என்றார்களாம்! நமது தோழர்கள் கண்டிப்பாக 'உயிரே போனாலும், ஏற்றிய கொடியை இறக்க மாட்டோம்' என்றார்களாம்! பிறகு காமராசர் கழகக் கொடி யைப் பார்த்துவிட்டு மெத்த வேதனைப்பட்டாராம்! வரவேண் டிய நேரத்தில் மேடைக்கு வராமல் கூட்டம் முடியும் தறுவா யில்— இரவு 8-50 மணிக்கு அவர் வந்தார்! நானும் 9-10 மணிக்கு சரியாகப் பேச ஆரம்பித்தேன்; உடனே அங்கிருந்த நமது தோழர்கள் எழுந்து நமது கூட்டத்திற்கு வந்துவிட்டார் கள்; நமது தோழர்கள் எழுந்து வந்ததும், வழக்கமாக அந்தத் திடலை ஆக்ரமித்துக் கொண்டிருக்கும் பன்றிக்கூட்டம் அங்கே

வர ஆரம்பித்தது! இதைப்பார்த்ததும் காமராசருக்குக் கோபம் வந்து' 'இந்தத் தி. மு. கழகமே இப்படித்தான்; அவர்கள் பன்றி மேய்ப்பதற்குத்தான் இலாயக்கு' என்ருராம்! அவர் இப்படிச் சொல்லிவிட்டாரே என்று நாம் வருந்தவில்லை; காமராசர் என்ன பேசுகிருர் என்பதற்கு மாதிரியாக இதை எடுத்துச் சொன்னேன்.

''நம்முடைய தோழர்களை அவர்கள், 'இவன்' 'அவன்' என்றெல்லாம் பேசுகிருர்கள் என்பதையும் நீங்கள் அறிவீர்கள்,

பாபநாசத்தில் நடந்து விட்ட நிகழ்ச்சிக்காக பழிவாங்க வேண்டும் என்பதற்காக மறுநாள் ஒரு காரியத்தைச் செய்தார்கள்; தஞ்சையில் நான் பேசிவிட்டு நண்பர்களுடன் காரில் வந்துகொண்டிருந்தேன்; நான்தான் காரை ஓட்டிக்கொண்டு வந்தேன்; கருந்தட்டாங்குடியைத் தாண்டிவந்ததும், என்னுடைய வண்டியை அதிகாரிகள் தடுத்து நிறுத்தி சோதனையிட்டார்கள்; 'என்ன சோதனை?' என்று கேட்டேன்; 'மதுவிலக்குச் சோதனை' என்ருர்கள்! கார் முழுவதும் சோதனை செய்து பார்த்து விட்டு, ஒன்று மில்லாமல் போகவே விட்டுவிட்டார்கள்.

என்னுடைய வண்டியை ஒரு 15நிமிடம் நிறுத்தி தொல்லை கொடுக்க வேண்டும், என்றே இப்படிச் செய்தார்கள்! இது மட்டு மல்ல; தஞ்சையில் நமது தோழர்கள், கூட்டத்தில் வாண வேடிக்கை விட்டார்கள்; வாணவேடிக்கை விடுவதற்குச் சில பிரத்தியேக உத்திரவை அதிகாரிகளிடம் வாங்க வேண்டும்; நமது தோழர்கள் அந்த உத்திரவை வாங்க வில்லை யென்றுகாரணம் காட்டி, நான்கு தோழர்களைக் கைது செய்திருக்கிருர்கள்!

''எங்களைத் தனித்தனியாகப் பார்த்தால் காமராசருக்கு மிகவும் சாதாரணமாகத்தான் தெரியும். கபிஸ்தலம் மூப்பனுர் வீட்

டில் பகல் விருந்து சாப்பிட்டுவிட்டு, வடபாதி மங்கலம் தியாக ராசனுர் வீட்டில் மாலேயில் டிபன் சாப்பிடுபவர் காமராசர்! அவருக்கு நாம் சாதாரணமாகத் தெரிவதில் ஆச்சரியமில்லே. அவருக்கு நமது சக்தியும், இலட்சியமும் சாதாரணமாகத் தெரிகிறது. அவருக்கு நாம், நம்முடைய இலட்சியமும், அதற்காக நாம் எடுத்துக்கொண்டுள்ள முயற்சியும் சாதாரணமானதல்ல என்பதைக் காட்டவேண்டும். நம்முடைய இலட்சியத்தை சுவை பார்க்க வேண்டுமென்று விரும்பிய பலபேருடைய பட்டியல், கோட்டையில் படமாகத் தொங்கிக்கொண்டிருக்கின்றன! இன்றைக்கு அவர்கள் எங்கே இருக்கிருர்கள் என்பதைக் காமராசர் கொஞ்சம் கண்ணே மூடிக்கொண்டு சிந்தித்துப் பார்க்கட்டும்.''

''இந்தியைத் திணிப்பதற்கான முயற்சியில், இன்று டெல்லியில் இருக்கிறவர்கள் கொஞ்சம்கூடத் தயக்கமில்லாமல் அக்கிரமங்களேத் துணிந்து செய்துகொண்டிருக்கிருர்கள். நமக்குக் கொஞ்சம் மனச்சாந்தி வேண்டுமென்பதற்காக இடைவெளியளிப்பதுபோல 'நேருவின் உத்தரவுக்கு மேல் மறு 'உத்தரவு இல்லே' என்று கூறப்பட்டது ; இதனே நாமெல்லாம் நம்பிேேனும்; ஆனுல், இன்று நமது நம்பிக்கையைச் சாகடிக்கும் வகையில் குடியரசுத் தலேவர் உத்திரவு வந்திருக்கிறது. நேருவின் உறுதிமொழியே அவமதிக்கப்படுகிறது !

''இனி நம்முடைய நிலே என்ன ? நாம் என்ன செய்வது ? இதைத்தான் நாம் யோசிக்க வேண்டும் ?

''பன்னிரண்டு ஆண்டுக் காலமாகப் பதுங்கிக் கொண்டிருந்தவர்கள், இன்று தைரியமாக இந்தியைத் திணிக்கிருர்கள்! அங்கே இருக்கிறவர்களெல்லாம், இங்கே, சென்னேயில் இருப்பவர்கள் ஏதோ சில சலுகைகளே எதிர்பார்த்திருப்பவர்கள்' —என்று எண்ணிக்கொண்டிருக்கிருர்கள்! மற்றபடி தங்களுக்குப் பின்

ஞூலே ஒரு பெரிய அரசியல் விடுதலை ஆர்வம் இருப்பதை அவர்கள் அறியவில்லை! நம்முடைய செயலாற்றும் திறமையை — அறைகூவலை அவர்கள் தள்ளி விட்டார்கள்! நாம் அதற்கு என்ன பதில் தரப்போகிறோம்?

கரூரில் டாக்டர் லோகியா பேசிய கூட்டத்தில் 'இந்தியில் பேசாதே, என்று தடுத்ததற்காக பல தோழர்கள் கைதாகி இருக்கிறார்கள்; இந்தச் செய்தியைப் பார்த்ததும் நான் பெரு மகிழ்ச்சி யடைந்தேன். இதுபோன்ற செய்தியை ஒரு சில மாதங்களுக்கு முன்பு நான் கேள்விப்பட்டிருந்தால், நானே கண்டித்திருப்பேன்; 'நமது பெருந்தன்மை போய்விட்டதே' என்று வருத்தப்பட்டிருப்பேன்; ஆனால், இன்று இப்படியொரு சம்பவம் தமிழகத்தில் நடைபெறாதா என்று எதிர்பார்த்திருந்த நான், இந்தச் செய்தியைக் கேட்டு மெத்த மகிழ்ச்சியடைகிறேன்.

இந்த எழுச்சி அவர்களுக்குத் தெரியவேண்டும்! இங்கே இந்தி பிரசார சபா, அதன் இருபதாவது ஆண்டு விழாவைக் கொண்டாடுகிறது. இதை எப்படி நாம் அனுமதிப்பது"

பள்ளிகளில் எல்லாப் பாடங்களிலும் தேறினாலும், இந்தியில் தேறவிட்டால் அந்த மாணவன் தேர்வில் வெற்றி பெற்றவனாக அறிவிக்கப்படுவதில்லை; பள்ளிக்கூடத்துத் தலைமை ஆசிரியர்களெல்லாம் நம்மைப் பார்த்து 'நீங்களெல்லாம் என்ன செய்துகொண்டிருக்கிறீர்கள்? இங்கே இந்தி வந்துவிட்டதே?' என்று வேதனையோடு கேட்கிறார்கள்!

"நிதியமைச்சர் சுப்பிரமணியம் கூட சட்டசபையில், 'இந்தி வராது' என்றார்! செய்திருப்பது என்ன? நடைமுறையில் இந்தி

புகுத்தப்படுகிறது! இப்போது சுப்பிரமணியமும், 'என்ருவது ஒருநாள் இந்தியைப் படிக்கப்போகிறீர்கள்; அதனுல் இன்றே படியுங்கள்' என்கிருர்! எவ்வளவு தைரியமிருந்தால் இப்படிச் சொல்லுவார்?

"தூங்கும்போது எதிரிக்குக் கதவை திறந்துவிடும் எட்டுப் பேர்களை நாம் அமைச்சர்களாக வைத்துக்கொண்டு அவர்களுக்கு இங்கு ஊர்வலங்கள், வரவேற்புகள் நடத்திக்கொண்டிருக்கிருேம்' இந்த நிலைமையை நாம் விரைவில் மாற்றித் தீரவேண்டும்!

"நாம் நாகரீகம்—பெருந்தன்மை என்றெல்லாம் கருதிக் கொண்டிருப்பதை, மாற்ருர்கள், 'கோழைத்தனம்' என்றே கணக்குப் போட்டு வைத்திருக்கிருர்கள்! நாம் அதிவிரைவில், 'இது கோழைத்தனமல்ல; அரசியல் நாகரீகம்' என்பதையும், இன்றைக்கு நாம் விரோதிகள் என்பதையும் காட்டித் தீரவேண்டும் நம்முடைய உரிமை வேட்கையை மாற்ருர்கள் அறியச் செய்ய வேண்டும்! நம்முடைய நாட்டைப் பெற நடைபெறும் போராட்டத்தில் ஈடுபட ஊருக்குப் பத்து பேர் இருக்கிருேம் என்பதைக் காட்டவேண்டிய காலம் வந்துவிட்டது!

இப்பொழுது இந்தியை எதிர்த்துப் போராட்டம் நடத்துவதில் தீவிரம் காட்டுவதில் நண்பர்களுக்குள் போட்டி இருக்கிறது. நமது நண்பர்கள் பேசுகிற ஒவ்வொரு பேச்சையும் நீங்கள் பத்திரிக்கையில் பார்க்கிறீர்கள். அண்ணு அவர்கள் "சாகும் நிலையில் இருக்கும்பொழுதும் போராட்ட ஆணையினை நமது கழகத் தோழர்களுக்கு அளித்துவிட்டுத்தான் சாவேன்' என்கிருர்; கருணுநிதி அவர்கள் போராட்டம் என்ருல் துடித்து கிளம்பி, வடநாட்டு ஏகாதிபத்தியத்திற்கு எதிராக இரயிலை

நிறுத்துவதில் முனைந்தே தீருவார்! அன்பழகன் அவர்கள் சட்டசபையிலேயே அமைச்சர்களுக்குக் கறுப்புக் கொடி காட்டுவார்! இதற்கான பயிற்சி இப்பொழுது நாடு முழுமையிலும் நடைபெறுகிறது.

"நான் செல்லுமிடங்கள் தோறும் ஊர்வலங்கள், வளைவுகள், வரவேற்புகள் ஆகியவைகளை வழிநெடுகக் காண்கிறேன்' என்னவென்று கேட்டால் 'அண்ணு வருகிருர்; நெடுஞ்செழியன் வருகிருர்; நடராசன் இந்த ஊருக்கு இரவு 8 மணிக்கு வருகிருர்; 9 மணிக்கு மேல் அந்த ஊரில் மனேகரன் பேசுவார்'—என்று கூறும் அளவில், கழக முன்னணி வீரர்களின் சூருவளிப் பயணம் நடைபெற்ற வண்ணம் இருக்கிறது. இந்திப் போராட்டம் பற்றி இம்மாதம் 18, 19-ம் தேதிகளில் குமாரபாளையத்தில் கூடும் பொதுக்குழு முடிவு செய்யும்.

"வடநாட்டுத் தலைவர்கள்—நேரு போன்றவர்கள்—தமிழ் நாட்டில் சென்று இந்தியில் பேசலாம் என்ற எண்ணத்தை நாம் தான் அவர்கள் மனத்தில் வளரச்செய்துவிட்டோம்! இப்படிப்பட்ட நிலைமையை நாம் இந்தத் தலைமுறையிலேயே மாற்றியாகவேண்டும். இதற்குப் போராட்டத்தைத் தவிர வேறு வழியில்லை!

"இன்று உலக நாடுகள் தங்களது உரிமையை நிலைநாட்ட போராட்டம்தான் அவற்றிற்கு வழியமைத்துத் தந்தது என்பதை நாம் நன்ருக அறிவோம்; 'பம்பாய் மாநிலம் இரண்டாகப் பிரிவதை ஆதரிக்கமாட்டேன்' என்ருர் நேரு; ஆனல் மக்களின் போராட்டம் உச்ச கட்டத்தை அடைந்தவுடன் நேருவே வந்து பிரித்துக் கொடுத்து வாழ்த்துரை வழங்கிவிட்டுத்தான் சென்ருர்!

"இதைப் பார்த்தாவது நாம் பாடம் பெறவேண்டாமா? நமது சரித்திரம் வீர வரலாறுகளைக் கொண்டதாக இருந்தாலும் இன்று, சில விஷயங்களில் நாம் வடநாட்டாரிடமிருந்து பாடம் பெறவேண்டியவர்களாக இருக்கிறோம்,

"நான் ஒரு சின்ன விஷயத்தை உங்கள் நினைவுக்குக் கொண்டு வருகிறேன்; டெல்லியில் வியாபாரக் கடைத்தெருவின் மத்தியில் சினிமாக் கொட்டகை ஒன்று இருக்கிறது; அதன் எதிரில் 50 அல்லது 60 கார்கள் நிற்கும்; இவ்வாறு நிற்பது இடையூறாக இருக்கிறது என்று கருதி அமைச்சர் பந்த் அவர்கள், 'இங்கே வாடகைக் கார்கள் நிற்கக்கூடாது' என்று உத்திரவு போட்டார்; அந்த உத்திரவை எதிர்த்து அங்குள்ள அத்தனை வாடகைக் காரோட்டிகளும், அங்கேயே கார்களை நிறுத்திவிட்டு 'சத்தியாக்கிரகம்' செய்தார்கள்; உடனே அமைச்சர் இராணுவத்தை அனுப்பி, அந்தக் கார்களை 'அடித்து நொறுக்குங்கள்' என்று உத்தரவிட்டார்' இராணுவத்தினரும் 10 காரை நொறுக்கினார்கள்; ஆனால் வாடகைக் காரோட்டிகள் மனம் தளராமல், பாக்கிக் கார்களையும் அடித்து நொறுக்குங்கள்' என்றார்கள்! பிறகு, 'இவர்கள் போராட்டத்தை நிறுத்தமாட்டார்கள்' என்று தெரிந்தவுடன் அமைச்சர் தாம் பிறப்பித்த உத்திரவைத் திரும்பப் பெற்றார்!

**"இந்த அளவுக்கு அவர்களிடம் போராட்ட உணர்வு இருக்கிறது! இதேபோன்ற போராட்ட உணர்வு இருக்கும் நாடுதான் உரிமையோடு விடுதலை பெற்று வாழமுடியும்!**

"இவைகளையெல்லாம் காணும்போது, 'மாற்றானுக்கு நம்மிடம் போர்க்குணம் இருப்பதைக் காட்டவேண்டும்; அதற்கு நாம் போர்ப்பயிற்சி பெறவேண்டும்; போராட்டத்தை நடத்திக் காட்டவேண்டும்' என்ற எண்ணம் எழுவது இயற்கையானதல்லவா?

"வெறும் ஓட்டு வேட்டையில்தான் இவர்கள் போட்டி போடப்போகிறார்கள்; இவர்களை நம்மிடமிருக்கும் பணபலத்தால் முறியடித்து விடலாம்' என்று மாற்றார் நம்பிக்கொண்டிருக்கிறார்கள். தேர்தல் பயிற்சி நமக்கு ஒன்றும் வராத வித்தையல்ல என்பதைக் காட்டத்தான் நாம் தேர்தலில் ஈடுபடுகிறோம்; சட்டசபையில் 15 பேரும், மக்கள் சபையில் இரண்டு பேரும், நகராட்சி மன்றங்களிலும் இடம் பெற்றுள்ளோம். நமக்கு ஆளத்தெரியாது என்று கருதுபவர்களுக்குப் பதில் சொல்லும் வகையில்தான் நாம் நல்லமுறையில் சட்டசபையில் பணியாற்றுகிறோம்.

"நாம் நடத்தும் போராட்டத்தில் நம்மில் பலர் இல்லாமல் போகலாம்; இது வயதின் முதிர்ச்சியால் அல்ல—தியாகத்தின் முதிர்ச்சியால் காணாமல் போகலாம்; ஆனாலும் அதை நாம் விரும்பி வரவேற்கிறோம். இப்படிப்பட்ட நிலைமை வெகு விரைவில் வரவிருக்கிறது. இதை எதிரிகளும் தெரிந்துகொள்ளவிருக்கிறார்கள்; இதற்கு நாம் ஆயத்தமாக வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்"



# திராவிடத்துக்கு

## எங்களின்

# இரண்டாவது காணிக்கை



திருவிடத்துக்கு வரலாறு சமைக்க
இருக்கின்ற எழிலோவியம்



ஆற்றல் மிகு அண்ணனின்
அழகோவியம் !



செந்தமிழ்ச் சிந்துபாடும் சொல்லோவியம் !



சிந்தனைக்கு விருந்துபடைக்க இருக்கின்ற
நல்லோவியம்!



ரங்கட்கு :-

" முல்லைப் பதிப்பகம் "

சிரி, :-: திருச்சி மாவட்டம்

க்கூடம், திருச்சி-2, பே